# எனது குருநாதர்

விலை அணா 8.

[மதிப்புரை]

[காரைக்குடி ஊழியன் : 13-12-1927]

*மொழிபெயர்ப்பு ஆசிரியர்:—ஆர். நாராயணசாமி அய்யர்.*

*சுவாமி விவேகானந்தரைக் குறித்தும், ராமகிருஷ்ண பரமஹம்சரைக் குறித்தும் அறிமுகம் செய்விக்கப்பட வேண்டியவர் இரார். ராமகிருஷ்ண பரமஹம்ஸரது ஆன்ம வளர்ச்சிபற்றி, பல முக்கிய நிகழ்ச்சிகளைக் குறித்து அழகுபட, சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவில் செய்ததோர் சொற்பொழிவின் மொழிபெயர்ப்பாகும் இச் சிறு நூல் ... சுவாமி விவேகானந்தரின் தெளிந்த நோக்கத்தைக் காட்டுவதற்காக, இந் நூலினின்றும் கீழ் வரும் பகுதியை எடுத்துத் தருகிறோம்:—*

*"நீ உண்மையில் சீர்திருத்தம் செய்ய வல்லவனாக வேண்டுமானால், உன்னிடம் அவசியமிருக்கவேண்டிய அம்சங்கள் மூன்று உண்டு. முதல்முதலாக அனுதாபம் வேண்டியது. உண்மையாகவே உன்னுடைய சகோதரர்களிடம் அனுதாபம் உனக்குண்டா? உலகத்தில் இவ்வளவு துக்கங்களும் அறிவீனமும் மூடபக்தியும் இருக்கின்றனவென்று உண்மையாகவே உணருகிறாயா? மனிதர்கள் என் சகோதரர்கள் என்ற உண்மையான அறிவு உனக்கிருக்கிறதா? இவ்வித அபிப்பிராயம் உன் சரீர முழுமையும் குடிகொள்ளுகிறதா? ...... பழைய கொள்கைகளெல்லாம் மூடபக்தியாகவே இருக்கலாம்; ஆனால், இந்த மூடபக்தித் தொகுதிகளைச் சுற்றி உள்ளும் புறமும் பொன் மயமான உண்மைப் பொருள்கள் பரந்து கிடக்கின்றன.......பொருளுக்காக ஆசைப்படாமலும், பெருமைக்காகவும் அதிகாரத்திற்காகவும் நீ தாபமடையாமலுமிருப்பது நிச்சயந்தானா? உலகமுழுமையும் எழும்பி உன்னை அமுக்க வேண்டுமென்று விரும்பினாலும் உன்னுடைய கொள்கைகளின்படி நீ உறுதியாய் நின்று வேலைசெய்ய முடியுமென்று நிச்சயமாய் நினைக்கிறாயா? உனக்கு வேண்டியது இன்னதென்று நிச்சயமாய்த் தெரியுமா? உன் கடமையைச் செய்து முடிப்பாயா? உன்னுயிரே போய்விடக்கூடிய நிலையிலிருக்கும்போதுகூட, தனியே நின்று செய்து முடிப்பாயா? ......இப்படியெல்லாம் இருக்க முடிந்தால், நீ உண்மையில் சீர்திருத்தஞ் செய்ய வல்லவன்தான்; நீ ஒரு உபாத்தியாயனே, ஆசாரியனே, மனிதவர்க்கத்தையே நீ இரட்சிக்கத் தகுந்தவன்."*

நீதிகளைப் புகட்டும் நூல்

மாதர்கள் தேடும் நூல்

குடும்பத்தை ஒழுங்காக நடத்தும் சிறந்த நூல்

# மாதர் நீதி

[மூன்று பர்வம்]

பத்திரிகைகளால் புகழ்ப்பெற்ற

## திருத்தமான 5-ம் பதிப்பு

[அ. மஹாதேவ செட்டியாரவர்களால் புதிய முறையில் அமைக்கப்பெற்றது.]

இந்நூலைப் பற்றி எங்களுக்குத் தினமும் அநேக ஆர்டர்கள் வந்து குவிகின்றன. ஒவ்வொரு இல்லத்திலும் இந்நூல் அவசியம் இருக்கவேண்டுமாதலால், இந்நூலைக் கண்டோர் யாவரும் தம் பந்து புத்திரர்களுக்கும் தம் புத்திரிகளுக்கும் மனைவிமார்களுக்கும் வாங்கிக் கொடுக்கின்றனர். இந்நூலில் ஒன்றை வாங்கிப் பரிசு மளிக்கின்றனர். நீதியுடன் இல்வாழ்க்கையை ஒழுக்கமாக நடத்துவதற்கு அறியாதவருக்குத் துன்பமேதவிர இன்பம் ஜனிப்பதில்லை என்பது உறுதியாம். இந்நூல் கல்விகற்கும் பர்வம், கணவரோடு கூடி வாழும் பர்வம், முதுமைப் பர்வம் என மூன்று பர்வங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது; ஒவ்வொரு பர்வத்திலும், மாதர்கள் நீதியாக வாழ்வதற்குரிய அநேக நீதிகளும், அந்நீதிகளைப் போதிக்கும் கதைகளும், அநேக நீதிகளின் மேற்கோள்களும் விளக்கமாக எழுதப்பட் டிருக்கின்றன.

இம் மாதிரியான நூல் இதுகாறும் தமிழில் வெளிவந்ததில்லை; இந்நூல் 5-பதிப்பாக வெளிவந்திருப்பதே இதற்குப் போதுமான நற்சாக்ஷியாகும். இந்நூல் கலியாணமான பெண்களுக்கும் இனிமேல் கலியாணம் செய்துகொள்ளும் பெண்களுக்கும் மிக அவசியமான பொக்கிஷமாகும். உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்பட்டு, அழகிய பயிண்டுடன் விலை ரூபா 1—0—0.

உயர்ந்த பெதர்வெயிட்டுக் கடிதத்தில் அச்சிடப்பட்டு, காலிக்கோ ஸ்பெஷல் பயிண்டுடன் கூடியது விலை ரூபா. 1—8—0

உ

கடவுள் துணை.

# மநுநீதி சதகம்

நூலாசிரியர்.—

திருவெண்ணெய் நல்லூர்

இராமப்ப உபாத்தியாயர் அவர்கள்

இந்நூலைப் புதிய முறையில் அமைத்தெழுதியவர்:

அ. மஹாதேவ செட்டியார் அவர்கள்.

இவர் திருமுருகாற்றுப்படை பரிமேலழகர் உரை, நீதிநெறிவிளக்கம் விருத்தியுரை, மாதர்நீதி முதலிய நூல்களைப் புதிய முறையில் அமைத்துக் கொடுத்தவரும், நாமாவளி கதம்பத்தை ஸம்ஸ்க்ருத உச்சரிப்புக் கிணங்க நூதன முறையில் தமிழில் எழுதித் தொகுத்தவரும், யஜுஸ் த்ரிகால ஸந்தியா வந்தன மந்திரத்தை ஸம்ஸ்கிருத உச்சரிப்புக் கிணங்கப் புதிய முறையில் விசேஷக் குறிப்புகளுடன் எழுதியவரும், மஹான்-சாது-ஸ்ரீ-ஸ்ரீ-இரத்தின சற்குரு அவர்களின் பாத சேகருமானவர்.

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புத்தகசாலை,

431, நயினியப்பநாயக்கன் தெரு,

பார்க் டவுன், சென்னை,

விபவ ௵] விலை அணா 8. [1928.

முனிவர் பலர் தத்தம் பெயரினாற் செய்த தரும நூலில் இனிமை தரும் ஆசாரம், வியவகாரம், பிராயச் சித்தம் என்னும் முக்காண்டங்களில், எழிலான வியவ கார காண்டத்திலே இராசப்ப உபாத்தியாயரால் சிற் சில எடுத்து இயற்றமிழினாலே மநுநீதி சதகம் என்று அருள் வடிவமான பழமலை நாதர்மேற் பாடப்பட்டது இந்நூலாமென்க.

கடவுள் துணை

# அணிந்துரை

கல்வியறிவிற் சிறந்த பெரியோர்களுக்கு அடியிற் கை யொப்பமிட்ட அடியேன் வணக்கமாகத் தெரிவித்துக் கொள் வது:

மநுநீதி சதகம் என்னும் பெயரோடுகூடிய ஓர் சதகம் நெடுங் காலத்திற்கு முன் வெளிவந்துளது பலர்க்குந் தெரிந்திருத் தல் கூடும். இதன் ஆசிரியர் திருவெண்ணெய் நல்லூர்-ஸ்ரீமத் இராசப்ப உபாத்தியாயர் அவர்கள்; இராசப்ப நாவலர் என்றும் வழங்கப்படுவர்.

இந்நூலை வாசிப்பதற்கு முன் இந்நூல் வரலாற்றைப்பற் றிச் சிறிதேனும் தெரிந்திருப்பது நலமாகையால், அஃது இங் குச் சுருக்கமாகக் கூறப்படுகிறது. இந் நூலாசிரியர் தமது நூலின் ஆரம்பத்தில் காப்புச் செய்யுளின் கீழ், நூல் வரலாறும் அவையடக்கமும் என்ற தலைப்புக் கொடுத்து ஓர் செய்யுள் பாடியுள்ளார். அதனால் இந்நூல் வரலாறு தெரியவருகிறது. இதன் விவரம் வருமாறு:—

மநு, பிதாமகன், நாரதன், தேவலன், கௌதமன், சங்கலி தன், வியாசன், மரீசி, பிரகற்பதி, வசிஷ்டன், அத்திரி, யாஞ்ஞ வற்கியன், பிருகு, போதாயனன், இயமன், விஷ்ணு, தாரே சுரன், காத்தியாயனன் முதலிய முனிவர்கள் தங்கள் தங்கள் பெயரினால் ஸ்மிருதிகள் அருளிச்செய்தனர். ஷை ஸ்மிருதி கள் என்னும் தரும சாஸ்திரங்களில் ஆசார காண்டம், வியவ கார காண்டம், பிராயச்சித்த காண்டம் என்னும் முப்பகுதிகள் அடங்கியுள்ளன. ஷை முப்பகுதிகளுள் வியவகாரகாண்டத்தி

லேயுள்ள விஷயங்களுள் சிலவற்றை நம் தமிழ்மக்கள் அறிந்து கொள்வான் வேண்டி இந் நூலாசிரியர் தமிழ்ச் செய்யுளிற் பாடி, ஒரு நூலாகத் தமிழுலகத்துக்கு அளித்தனர்.

இந் நூலுள் பெரும்பான்மையாக வியவகார சம்பந்தமாயுள்ள விஷயங்களும், சிறுபான்மையாக நீதிவிஷயங்களும் அடங்கியுள்ளன. பலவிதமான வியவகாரத் துறையுள் பிரவேசிப்போர்க்கு இந்நூல் பயன் தருவதாம். வியவகாரத்தில் ஈடுபடாதவர்களும், வியவகார விஷயத்தில் சிறிதும் பயிற்சியில்லாதவர்களும் இந்நூலை வாசிப்பாராயின், அன்னோர்க்கு வியவகார விஷயத்தில் பயிற்சி உண்டாகும். மேலும், இந்நூல், அருள்வடிவமான பழமலைநாதர்மேல் துதிநூலாயும் அமைந்துள்ளது. இந் நூலின் ஒவ்வொரு பாடலின் ஈற்றிலும் துதி காணப்படுகிறது. இதேபோன்று ஆத்திசூடி புராணம் என்னும் நூலின் ஒவ்வொரு செய்யுளிலும் நீதியும் துதியும் அமைந்துள்ளன.

* மநுஸ்மிருதி யென்னும் மநுதர்ம சாஸ்திரமானது எல்லா ஸ்மிருதிகட்கும் தலைமையாயுள்ளது. "இந்த ஸ்மிருதி கூறிய விஷயங்களுக்கு விரோதமாக இதர ஸ்மிருதிகள் கூறின், அவை பிரமாணங்களாகா" என்று ஆன்றோர் கூறுவர். இந்த ஸ்மிருதி கூறிய சில விஷயங்கள் இக்கால அநுஷ்டானத்தி லில்லை; முன் யுகங்களிற் பிரமாணமாயிருந்தன. இக் கலியுகத்திற் பிரமாணமாயுள்ளது ஸ்ரீ பராஸர ப்ரஹ்மரிஷி இயற்றியருளிய பராசர ஸ்மிருதியேயாகும். இந்த ஸ்மிருதிதான் இக்காலத்தில் அநுஷ்டானத்தி லிருப்பதாம்.

"மநுஸ்மிருதி கூறியுள்ள விஷயங்களிற் பல ஆக்ஷேபத்திற் கிடமாயுள்ளன" என்றும், "புராண இதிகாசங்களாற் கூறப்பட்டுள்ள ஜாதி சம்பந்தமான விஷயங்களும் ஆக்ஷேபத்திற்

---

* மநு தர்ம சாஸ்திர வசனம், உயர்ந்த காலிகோ பயிண்டுடன் விலை ரூபா 2.

கிடமாயுள்ளன'' என்றும் கூறப்படுகின்றன. அவற்றைப்பற்றிப் பத்திரிகைகளில் பலமான கண்டனங்களும் வெளிவந்து கொண்டுள்ளன.

"ஒரே குற்றத்தைப் பிராமணன் செய்தால் அவனுக்கு ஒரு விதமான தீர்ப்பும், இதர ஜாதியார்கள் செய்தால் அவர்களுக்கு வேறொருவிதமான தீர்ப்பும் மநுஸ்மிருதியால் கூறப்பட்டுள்ளன. பிராமணர்கள் ஒவ்வொரு துறையிலும் தங்களுக்கும் தங்கள் சார்பார்களுக்கும் எவ்வளவு சாதகங்கள் தேடிக்கொள்ள வேண்டுமோ அவ்வளவு சாதகங்களையும் ஸ்மிருதிகளிலும் புராணேதிகாசங்களிலும் சட்டதிட்டங்களாக அமைத்துக்கொண்டு இதரஜாதியார்களை நெடுங்காலமாகத் தலையெடுக்கவொட்டாமல் அடக்கி ஆண்டுகொண்டு வருகிறார்கள்'' என்று சிலர் கூறுகின்றனர்.

மநு ஸ்மிருதியால் கூறப்பட்டுள்ள சில கண்டனை விஷயங்களைப் பார்வையிடும்போது, அவற்றை வாசிப்போர்க்குக் குடல் நடுக்கம் உண்டாதல் கூடும்; 'இப்படிப்பட்ட கொடுமையான சட்ட திட்டங்களும் அக்காலத்தில் அநுஷ்டானத்தில் இருந்து கொண்டுவந்தனவல்லவோ' என்று மனம் பதைக்கும்.

மநு ஸ்மிருதியாற் கூறப்பட்டுள்ள ஆக்ஷேப விஷயங்களைப் பற்றிச் சிலர் ஓர்வித சமாதானம் கூறுகின்றனர். அவை வருமாறு:—"மேற்படி ஸ்மிருதியால் கூறப்பட்டுள்ள விஷயங்கள் அவ்வளவும் மநு என்பவரின் சொந்த அபிப்பிராயம் அன்று'' என்பதும், "அக்காலத்தில் அநுஷ்டானத்திலிருந்த விஷயங்களையெல்லாம் அவர் ஒரு கோவைப்படுத்தி ஸ்மிருதியேற்படுத்தினார்'' என்பதுமேயாம். இது எவ்வளவுதூரம் உண்மையாமென்பதை ஈசனே அறியவேண்டும். நாம் ஒன்றும் கூறுவதற்கில்லை. நிற்க;

"வேதங்களை ஆராய்ச்சி செய்தால் ஜாதி சம்பந்தமான விஷயங்கட்கு அவற்றில் ஆதாரமில்லை" என்பர் சிலர். "புராணேதிகாச காலங்களிலேதான் ஜாதிக் கட்டுப்பாடு உண்டாயிற்று" என்பர் சிலர்.

"ஆன்றோர்கள் அக்காலத்தில் தொழிலை முன்னிட்டு நான்கு ஜாதிகள் ஏற்படுத்தினார்கள்" என்றும், "பிறகு காலஞ் செல்லச் செல்ல மதி குறைந்தவர் ஆதிக் கோட்பாட்டை மறந்தோ, அல்லது மறைத்தோ 'பிறப்பினாலேயே உயர்ந்த ஜாதி' என்றும், 'தாழ்ந்த ஜாதி' என்றும் கூறி ஒரு கட்டுப்பாட்டை அமைத்துக் கொண்டனர்" என்றும், "இதற்குத் தகுந்தவாறு புராணேதிகாசங்களில் பிரமாணங்கள் அமைத்துக்கொண்டனர்" என்றும் சிலர் கூறுப.

"உயர்ந்த ஜாதியிற் பிறந்தவன் தாழ்ந்த ஜாதியில் இனிப் பிறவான்" என்பர் சிலர். "உயர்ந்த ஜாதியிற் பிறந்தவன் மீண்டும் தாழ்ந்த ஜாதியிற் பிறவான் என்று கூறுவது கூடாது" என்றும், "வினைப்பயனுக்குத் தக்கவாறு மீண்டும் தாழ்ந்த யோனிகளிலும் பிறத்தல் கூடும்" என்றும், "இதற்குச் சில சரித்திரங்களே சான்று" என்றும் வேறு சிலர் கூறுவர்.

இவ்விதம் ஒரு பக்ஷத்தார் கூறுவதை மற்றொரு பக்ஷத்தார் மறுப்பதும், ஒவ்வொரு பக்ஷத்தாரும் தாங்கள் மறுத்த விஷயங்களுக்குப் பலமான ஆதாரங் காட்டிப் பத்திரிகைளில் பலமான வாதங்கள் வெளியிடுவதுமாயிருக்கின்றனர். அவற்றையெல்லாம் இச் சிறு நூலில் கூறுவதென்றால் விஷயம் மிக விரிந்துபோம். நெடுங்காலமாகப் பிராமணர் பிராமணரல்லாதார் ஆகிய இரு தரத்தாருள்ளும் ஒற்றுமை குறைந்து வருவதும், வைஷம்மியம் மிகுந்துகொண்டு வருவதும் மிக வருந்தத்தக்கனவேயாம். இவ்வித துரவஸ்தை நீங்கி நாடு க்ஷேமப்படும் காலம் என்று வருமோ? அறியோம்.

'எத்தால் வாழலாம், ஒத்தால் வாழலாம்'' என்பது ஆன்றோர் விதி. ஆதலால், இந்நூலை வாசிக்கும்போது சில செய்யுட்களிற் கூறப்பட்ட விஷயங்கள் சிலர்க்கு ஆக்ஷேபகர மாகத் தோன்றலாம்; அது காரணமாக மனத்தின்கண் ஓர்வித எண்ணம் உண்டாகலாம். இந்நூலை வாசிப்பவர்கட்கு அன் போடு தெரிவித்துக்கொள்ளும் விண்ணப்பம் ஒன்று உண்டு. அஃதாவது, ஆக்ஷேபகரமான விஷயங்கள் தோன்றுமிடங்களில் 'இப்படிப்பட்ட சட்ட திட்டங்களும் அக்கால வழக்கில் இருந்து கொண்டுவந்தனவல்லவோ!' என்று நினைத்து, உடனே அவற் றை மறந்து, மனதைச் சாந்தி செய்துகொள்ளல் வேண்டும். மற்றப்படி நூலையாவது, நூலாசிரியரையாவது பழித்தலில் ஒரு பிரயோஜனமுமின்று. ஹம்சப்பக்ஷி போன்று சத்தான விஷயங் களைக் கிரகித்துக்கொண்டு, அசத்தான பாகங்களைத் தள்ளிவிடு வதே நலம்.

இந்நூலைப் பதிப்பித்த எனது நண்பரவர்கள் வேண்டுகோ ளின்படி மேற்கூறிய விஷயங்களை இங்குக் கூறும்படியான சந்தர் ப்பம் ஏற்பட்டது. எவரையும் குறை கூறவேண்டு மென்பது எமது அபிப்பிராயமன்று. நாட்டிலுள்ளார் துவேஷ புத்தி பாராட்டுவதினின்றும் நீங்கி ஒன்றுகூடி வாழவேண்டு மென் பதே எமது அபிப்பிராயமாம்.

இந்நூலிலுள்ள குற்றங்களுக்குத் தண்டனை கூறும் சில செய்யுட்களின் விஷயங்கள் ஆக்ஷேபத்திற் கிடமானவையாக வும், பாரபக்ஷத்திற்கு இடமானவையாகவும் காணப்படலாம். அப் பாகங்களைப் படிக்கும்போது சிலர்க்கு வருத்தமும் ஆத்திர மும் தோன்றுதல் கூடும். ஏனெனில், ஒரே குற்றத்தைப் பிரா மணன் செய்தால் அவனுக்கு ஒருவிதமான தண்டமும், அதே குற்றத்தை ஏனையோர் செய்தால் அவர்களுக்கு வேறொருவித மான தண்டமும் இந்நூலில் கூறப்பட்டுள்ளன. இது பலர்க்

கும் ஆக்ஷேபகரமாகத் தோன்றும். இம்மாதிரி விஷயங்கள் பலத்த விவாதத்திற் குரியனவாகும். இந்நூலை வாசிப்பவர்கள் ஒருவிஷயத்தை முக்கியமாக ஞாபகத்தில் வைத்தல் வேண்டும். இந்நூலுள் கூறப்பட்டுள்ள விஷயங்கள் அவ்வளவும் இந்நூலாசிரியரின் அபிப்பிராயமன்று. பல ஸ்மிருதி கர்த்தர்களின் அபிப்பிராயங்களையே இவர் தாம் பாடிய நூலில் அமைத்துள்ளார். இதனால் நூலாசிரியர்மீது நாம் யாதொரு தோஷாரோபணமுங் கூறுதல் கூடாது. வியவகாரவிஷயத்தில் சிறிதும் பயிற்சி பெறாத மக்கள் பலருளரன்றோ? அன்னோர் சிறிதேனும் பயிற்சி பெறுவான்வேண்டி இந் நூலாசிரியர் கருணையோடு இந்நூலை அருளிச் செய்துள்ளார். நிற்க;

வித்வச் சிரோமணிகள் பலர் தாம் அடைந்த ஆநந்தத்தை உலகத்தாரும் அடைய விரும்பித் தமது சுவாநுபவத்தில் உதித்த விஷயங்களை மிகவும் காருண்யம் நிறைந்த சிந்தையுடன் சாஸ்திரங்களாக அருளிச்செய்து நம்மனோர்க்குப் பெரும் புதையல்போல் வைத்துவிட்டுப் பூதவுடம்பை நீக்கிப் புகழுடம்பு பெற்று மறைந்தனர். ஒரு பிதாவானவன் தான் நெடுங்காலம் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த திரவியத்தைத் தன் வயிற்றில் பிறந்த மக்களுக்கும் சுற்றத்தார்க்கும் பங்கிட்டுவிட்டு இவ்வுலகை விட்டு நீங்கிவிடுகின்றான். நம் வித்வத்சிரோமணிகள் தம் தமிழ்ச்சந்ததியார்க்கு ஆஸ்தியாக வைத்த பெருநிதியான சாஸ்திரங்களோ இன்னாருக்குத்தான் சொந்தமென்பதில்லை; உலகத்தில் எல்லோருக்குமே அவற்றில் பாத்திய முண்டு. இதற்கு உதாரணமாகத் திருவள்ளுவதேவர் அருளிச்செய்த ஒப்புயர்வற்ற திருக்குறளை எடுத்துக்கொள்வோம். இந்நூலின் மகிமையைத் தமிழ் உலகம் மட்டும் அன்று, பிரபஞ்ச முற்றுமே கொண்டாடுகிறது. இது எல்லோர்க்கும் அநுபவ பூர்வகமாகத் தெரிந்த விஷயந்தானே. இதற்குச் சாட்சியும் வேண்டற்பாலதோ? இதற்கு அடுத்து

ஸ்ரீமத் இராமாயணத்தை எடுத்துக்கொள்வோம். இந்நூல் வெளிவந்து பல நூற்றாண்டுகள் கடந்தும் இன்றும் எவ்வளவு பெருமையுடன் பலராலும் கொண்டாடப் படுகின்றது, ஸ்துதி செய்யப்படுகிறது? இவ்வித மகத்துவம் வாய்ந்த நூல்களெல்லாம் தெய்வ கலையும், ஜீவ கலையும் பொருந்தியனவாகும். அதனாற்றான் அவை பல மகஸ்தர்களாலும் கொண்டாடப் படுகின்றன; இதனைப் பலரும் பாக்கியம் கொண்டாடுகிறார்கள்.

நம் புலவர்கள் அரும்பாடு பட்டுச் செய்த சாத்திரங்களோ அநந்தம். அவற்றுள் பல ஆதரிப்பாரின்மையால் நெடுங்காலத்திற்கு முன்னரே மறைந்து போயின; மற்றும் பல மறைந்து கொண்டுவருகின்றன. எஞ்சியுள்ள நூல்களையேனும் மறைந்து போகாவண்ணம் ஆதரித்தல் நம் தமிழ்மக்களுக்கு ஏற்பட்ட கடமையன்றோ? அதினும் நம் தாய்ப்பாஷையின்மீது ஆர்வங் கொண்டுள்ள பலர்க்கும் கடனன்றோ? நம் தமிழ்ப் பாஷையிலுள்ள நூல்களைத் தமிழ்மக்களாகிய நாமன்றோ ஆர்வத்துடன் வெளிப்படுத்தி நம் தமிழ் உலகுக்கு உபகரித்தல் வேண்டும்? நாம் செய்யாவிட்டால் நமக்குப் பதிலாக அன்னிய பாஷையாரா இதில் பிரவேசிப்பார்கள்? பிறபாஷையார் தங்கள் தங்கள் தாய்ப் பாஷையிலுள்ள நூல்களை என்ன அரும்பாடு பட்டுக் காப்பாற்றுகிறார்கள்? நாம் பட்டும் அசிரத்தையோ டிருப்பதென் அது நம் தமிழ்த்தாய் செய்த தவப்பயனே போலும்! நிற்க; இனி இந்நூல் சம்பந்தமான விஷயத்தைத் தொடர்ந்து செல்வோம்.

மநுநீதி சதகம் என்னும் இந்நூல் நெடுங்காலத்திற்கு முன் வெளிவந்ததாகத் தெரிகிறது. இதற்குப் பிறகு இதன் மறுபதிப்பு வெளிவந்ததும் வாராததும் தெரியவில்லை. இந்நூலை இப்போதுதான் யான் பார்க்கும்படியான சந்தர்ப்பம் ஏற்பட்

டது. மநுநீதி காதல் என்னும் பெயருடன் கூடிய ஒரு நூல் தற்காலம் வழங்கப்பட்டு வருகிறது. ஆயினும், மநுநீதி சதகம் என்னும் பெயருள்ள நூலை இதுவரையில் யான் கேட்டறியேன்.

இந்நூலை வெளிப்படுத்தியவரும், மஹான்-சாது-ஸ்ரீ சை. இரத்தின சற்குரு புத்தகசாலையின் அதிபரும், ஷை சற்குரு அவர்களின் பௌத்திரரும், லோகோபகாரமாகப் பல சாத்திரங்களை வெளியிட்டுக்கொண்டு வருபவரும், பழைமையான சாஸ்திரங்களுள் சிலவற்றையேனும் ஒன்றன்பின் ஒன்றாக வெளிக்குக் கொணர்தற்குப் பிரயத்தனஞ் செய்துகொண்டு வருபவரும், நெடுங்காலமாக எனக்கு நண்பராயுள்ளவருமாகிய ம-ள-ள-ஸ்ரீ சை. ந. பாலசுந்தரஞ் செட்டியாரவர்கள் ஷை சதகத்தை அச்சிட உத்தேசித்துப் பிரதிக்காக முயன்றபோது பிரதி கிடைப்பது மிக அரிதாகிவிட்டது. பிறகு, அடியேனுக்குச் சில காலம் ஆசிரியராயிருந்த சென்னை ஹிந்து தியலாஜிகல் உயர்தரக் கலாசாலைத் தலைமைத் தமிழ்ப் புலவரும், திருக்குறள் விரிவுரை-கைவல்ய நவநீதம்-வேதாந்த சூடாமணி முதலிய பல சாஸ்திரங்களின் விரிவுரை ஆசிரியரும், இலக்கண - இலக்கிய - தருக்க - வேதாந்த போதகாசிரியருமான மஹான் - சாது - ஸ்ரீமான்- கோ. வடிவேலுசெட்டியாரவர்கள் தம்மிடமிருந்த மிகப்பழைய பிரதியொன்றைக் கருணையுடன் கொடுத்துதவிசெய்தார்கள். அவர்கள் மனமுவந்து ஷை பிரதியைக் கொடுத்திராவிடில் இந்நூல் வெளிவருதற்குக் காரணமே யில்லை. இந்நூல் வெளிவருவதற்கு அவர்களே காரணமாவார்கள். அதுபற்றி அவர்களுக்கு நன்றிகூறப் பலரும் கடமைப்பட்டுள்ளார்கள்.

ஷை எனது நண்பரவர்கள் ஷை நூலை என்னிடங் கொடுத்து, இதனைச் சிறந்த முறையிலும், நூதன முறையிலும் அமைத்துத் தருமாறு கேட்டுக்கொண்டார்கள். அவர்கள் அன்போடு தெரிவித்த உத்தரவுக் கிணங்கி, 'இதனை எந்த முறையில் அமை

தால் அது பலர்க்கும் பிரயோசனமாகும்' என்பதைச் சிந்தித்தேன் இந்நூல் பலர்க்கும் பிரயோசனமாகுமாறு, இதற்கு முன் சில நூல்களைப் புதிய முறையில் ஷை எனது நண்பரவர்களுக்கு அமைத்துக் கொடுத்தது போன்று, இந்நூலையும் நவீன முறையை யனுசரித்துத் தயார் செய்தேன். இதுகாறும் ஒரு சதகந்தானும் இந்த முறையை யனுசரித்து வெளிவந்தது கிடையாது.

இந்நூலில் கடின சந்திகள் பிரிக்கப்பெற்றுள்ளன; கூடிய வரையில் சந்தங் கெடாதவாறு சந்திகளைப் பிரித்திருக்கின்றேன். சந்தி பிரிப்பதனால் சந்த இன்பம் சிறிது குறையுமென்று தோன்றின விடங்களில் அவ்வாறு பிரிக்கப்பட்ட சில ஒற்றெழுத்துகள் () இவ்வித இருதலைப் பிறைக்குள் காட்டப்பட்டுள்ளன. சமயோசிதமான வாசகக்குறிகள் ஒவ்வொரு செய்யுளிலும் அமைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு செய்யுளையும் வாசிக்கும்போதே கூடியவரையில் பொருளுணர்ந்துகொள்ளுமாறு இந்நூலை அமைத்திருக்கின்றேன். இந்நூலிலடங்கியுள்ள ஒவ்வொரு விஷயமும் இன்ன இன்ன பக்கத்திலடங்கியிருக்கிறதென்கிற விவரம் தெரிந்துகொள்ளும் பொருட்டு விஷய அட்டவணை யொன்று புதிதாக எழுதி நூலின்முன் சேர்த்திருக்கின்றேன். எனக்குச் சந்தேகந் தோன்றிய இடங்களிலெல்லாம் அவற்றை ஷை எனது ஆசிரியர் தக்கவாறு திருத்தியதோடு, ஒவ்வொரு பாரத்தையும் திருத்திக்கொடுத்து உதவிசெய்தார்கள். ஷை எனது ஆசிரியர் செய்த உதவிக்கு அவர்கள் பாத கமலங்களை மன மொழி மெய்களால் வந்திப்பதன்றி அடியேன் வேறியாது கைம்மாறு செய்யவல்லேன்? இந்நூலை அச்சிடுவதற்கண் ஷை எனது நண்பரவர்களுக்குச் சரீர சிரமம் அதிகம் ஏற்பட்டது.

தமது தேக சிரமத்தையும் பொருட் செலவையும் பாராட்டாமல் இந்நூலை வெளியிட்டவர்க்கு நம் தமிழ் மக்கள் பலரும் சேர்ந்து இந்நூலை ஆதரிப்பதோடு, மென்மேலும் இம்மாதிரி விஷயங்களில் ஊக்கம் உண்டாகுமாறும் செய்து வருதல்வேண்டும்.

எம்பெருமான் திருவருளால் இந்நூல் இனிது நிறைவேறியதுபற்றித் திருவருளை மன மொழி மெய்களால் வந்தித்து

வாழ்த்துகின்றேன். இந்நூலிற் பிழையுளதேல் உலகம் பொறுக்க. சுபம்.

மஹாத்மா-சாது-ஸ்ரீ-சை. இரத்தின சற்குரு அவர்கள் திருவடி வாழ்க.

மஹான் சாது - கோ. வடிவேலு செட்டியாரவர்கள் திருவடி வாழ்க.

உலகில் தருமமும் சத்தியமும் தழைத்தோங்குக.
பிரஜைகள் அனைவரும் ஒற்றுமையுடன் வாழ்க.

[திருக்குறள்-அறத்துப்பால்-இல்லறவியல்-௧0-அதிகாரம்-ஒழுக்கமுடைமை-௧0-குறள்]

"உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்."

பரி:—(இ-ள்) உலகத்தோடு பொருந்த வொழுகுதலைக், கல்லாதார் பல நூல்களையுங் கற்றாராயினும் அறிவிலாதார், எ-று.

* உயர்ந்தோரோடு பொருந்த நடத்தலாவது உயர்ந்தார் பலரும் நடந்தவழியாக நடத்தல். தருமசாஸ்திரம் கூறியவற்றுள், இக்காலத்திற்குப் பொருந்தாதனவற்றை விட்டு, கூறாதனவற்றுள் பொருந்துவனவற்றைக் கொண்டு வருதலால் அவையும் அடங்குவதற்கு 'உலகத்தோ டொட்ட' என்றும், கல்விக்குப் பயன் அறிவும் அறிவிற்குப் பயன் ஒழுக்கமும் ஆதலின் அவ் வொழுக்கத்தைக் கல்லார் பல கற்றும் அறிவிலாதார்' என்றும் சொல்லினார். ஒழுகுதலைக் கற்றலாவது பின்பற்றி நடத்தல்.

நெம் 3, மேட்டுத் தெரு,
ஜார்ஜ் டவுன்,
சென்னை: 5—6-1928.

இங்ஙனம்,
தாஸன்,
அ. மஹாதேவ செட்டி.

---

* இது சென்னை ஹிந்து தியலாஜிகல் உயர்தர கலாசாலைத் தலைமைத் தமிழ்ப்புலவரும், இலக்கண-இலக்கிய-தருக்க-வேதாந்த போதகாசிரியரும் ஆகிய மஹான்-சாது-கோ-வடிவேலுசெட்டியார் அவர்கள் இயற்றிய திருக்குறள் பரிமேலழகருரை - தெளிபொருள் விளக்கவுரை - கருத்துரை - குறிப்புரையுடனும், ஆங்கில மொழிபெயர்ப்புடனுங்கூடிய திருத்தமான இரண்டாம்பதிப்பிலிருந்து எழுதப்பட்டது. இந்நூல் உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் பிழையறப் பரிசோதித்து அச்சிடப்பட்டு, இரண்டு வால்யமாகக் காலிகோ பயிண்டு செய்யப்பட்டுள்ளது விலை. ரூபா எட்டு (தபாற்கூலி வேறு.)

கடவுள் துணை

# விஷய அட்டவணை

# திரிகடுகம் மூலமும் உரையும்.

[புதிய பதிப்பு]

இந்நூல் நல்லாதனார் அருளிச் செய்தது; இதற்குச் சென்னைக் கவர்ன்மெண்டு நார்மல் கலாசாலைத் தமிழ்ப்புலவரும், திரிசிரபுரம் மஹாவித்வான் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் மாணவருள் ஒருவருமாகிய சோடசாவதானம் திருவாளர் தி. சுப்பராய செட்டியார் அவர்கள் இயற்றிய உரை பதவுரையும், விரிவுரையும், அரிய பெரிய இலக்கணக் குறிப்புகளும் அமையப்பெற்றது. இத் திரிகடுக உரைப் புத்தகத்தைப் படிப்பவர்கள் சொல்லியல்பு, பொருளியல்பு, அணியியல்பு முதலியவற்றை மிக எளிதில் அறிந்துகொள்வதற் குரியவராவர். நல்லாசிரியன் போன்று விளங்கும் இது சென்னை ஹிந்து தியலாஜிகல் உயர்தர கலாசாலைத் தமிழ்ப் புலவர் ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியாரவர்கள் பார்வையில் உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பட்டுள்ளது. இதன் விலை அணு 6

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்
திருவாய் மலர்ந்தருளிய

# நீதிநெறிவிளக்கம் மூலமும் விருத்தி உரையும்

[புதிய பதிப்பு]

நீதிநெறிவிளக்கம் பதவுரையும், தொகுத்துரையும், விரிவுரையும், இலக்கணக் குறிப்புகளும், மூலத்திற் கியையுமாறு புதிய முறையில் அ. மஹாதேவ செட்டியாரவர்களால் அமைக்கப் பட்டது. ஆங்கிலமொழிபெயர்ப்பும், ஒவ்வொரு செய்யுளுக்கும் ஹெடிங்கும், திருக்குறள் மேற்கோளும் உடையது. இது சென்னை ஹிந்து தியலாஜிகல் உயர்தர கலாசாலைத் தலைமைத் தமிழ்ப்புலவர் ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியாரவர்களால் பார்வையிடப்பட்டது; உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அச்சிடப் பட்டது. கண்ணைக் கவரும்படியான பயிண்டுடனிருப்பது.

இதன் விலை ரூபா 1 0 0

உ

கடவுள் துணை

# மநுநீதி சதகம்

## காப்பு

நாதன் பழமலைவாழ் நம்பன்றன் மீதுமநு
நீதி சதக நிகழ்த்தவே—மீதலர்க்குக்
கந்தனுக்குக் கைக்கயமுங் கற்பகமு நிற்கவருட்
கந்தனுக்கு முன்னவனே காப்பு.

## [நூல் வரலாறும், அவையடக்கமும்]

மநு,பிதா (மகன்),நாரதன்,தேவலன்கௌத
மன்,சங்கலிதன்,வியாசன்,
மரீசி,பிரகற்பதி, வசிட்டன், அத்திரி,யாஞ்ஞ
வற்கியன், பிருகு,போதா

யனன்,இயமன், விட்டுணு, காமேசுரன்,காத்தி
யாயனன், நாரதன்மற்(று)
அரியபல முனிவரிவர் தங்கள்தங் கட்பெயரி
னாற்செய்த தருமநூலில்

இனிமைதரும் ஆசார விவகார ப்ராயச்சித்தம்
என்னு(ம்)மூக் காண்டத்தினில்
எழிலான விவகார காண்டத்தி லேசில
எடுத்(து),இயற் றமிழினாலே

மநுநீதி சதகம்என்(று) அருள்வடிவ மானபழ
மலைநாதர் மேற்பாடியென்
மதியிலா மையைவெளிச் செய்தனன்; கவிஞர்கள்
மனம்பொறுத்(து) அருள்புரிவரே.



ஓம்

கடவுள் துணை

# மநுநீதி சதகம்

## [க. கடவுள் வாழ்த்து]

பூமேவு மிந்திரை விளங்குமணி மார்பனும்
புண்டரீகப் பொகுட்டில்
போதனும்- பொன்னுலக நாதனும்- தேவரும்
புகழான நிலைபெற்றதும்,
தேமேவு மலர்வாளி யெய்தமன் மதனைச்
சினந்துமிர தியின்மங்கலந்
திகழ்வுற நிலைத்ததும், சநகன்முத லானோர்
சித்தமிகு தெளிவானதும்,
பாமேவும் ஆகம புராணங்க ளருளெனப்
பகருமொரு பொருளறிந்தும்
பரசமய நெறிபுகுந்(து) இகபமகிழ் வார்க்கென்ன
பான்மையோ அவையறிகிலேன்;
மாமேவு கொன்றைபுனை செஞ்சடா டவியனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதிலனு தினமு(ம்)நினை கரும்இடப மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [உ. சபை அலங்காரம்]

உலகுபுகழ் குரு-புரோ கிதர்-புரா ணிகர்-கவிஞர்-
உணருமந் திரியர்-தூதர்-
உற்றநட் பாளர்-கிளை யார்-ஒற்றர்- தளகர்த்தர் -
உயர்மருத் துவர்கள்சூழ,

அலகின்மநு நூற்பொருள் நூலறிந்(து), அறிவு-கொடை-
அஞ்சாமை-ஊக்கமுண்டாய்,
அச்சமொடு- பகை-அழுக் கா(று)-அவா வெகுளியும்
அகற்றி, ஆலயம் விளங்கச்,
சகசரம் உலாவுவய லூடுகள் செழித்திடத்
தருமா சனத்திருந்து
தகைமைபெறு செங்கோல் நடாத்திவரும் அரசாது
சபையலங் காரமென்பார்;
மலர்வதன சுகிர்தகுண லிங்கபூ பதிபெற்ற
மகிபன்முத் தையமதவேள்
மனதிலனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[௩. நீதியுத்தி]

வந்துவிவ காரம் புகன்றிடுவர் முகவடிவு
மாறல், வாய் வசனமாறல்,
மயிர்சிலிர்த் திடுதல், கீழ்ப் பார்வைநுதல் வெயர்வெழுதல்
மனதச்ச மலதியற்கை
நிந்தையுள னல்லன்என நிச்சயஞ் செய்வதுவும்;
நியமசான் றினர்இலாமல்
நேராக வந்தொருவன் "எனையடித் தான்" என்று
நின்றுடற் புண்காட்டினல்,
சிந்தையனு மானித்து முன்(பு)இருவர் சேர்ந்ததும்
சேர்ந்துசெய் வினையும்ஓர்ந்து,
செப்புமொழி நிசமென்று நிசிதமென் றுங்கண்டு
தீர்ப்பதுவு(ம்) நீதியுத்தி;
மந்தர நெடுங்கிரி வளைத்தகெம் பீரனே!
மகிமன்முத் தையமதவேள்

மனதிலனு தினமு(ம்) நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௪. அரசர் திட்டஞ் செய்யு மியல்பு]

வேதமுணர் வேதியர் தமக்குமா னியநிலம்
விடுத்துநித் தியகிர்த்தியம்
விலகாமல் அனுதினமும் விரதங்கள் முதலான
வேள்விபுரி கவு(ம்), மற்றமோர்
சாதிமுறை வழுவாமல் அவரவர் விருத்தியைச்
சார்ந்தறிய மம்புரிந்து,
தக்கதே வாலயம் வாவிநீர்க் காவணத்
தருமங்கள் மிகசெலுத்தித்,
தீதுபுரி கள்ளர்மிரு கம்புகுவ தனையகற்
றிடமனைக மேடாறுநிதமும்
திறமான ஒவ்வொருவர் ஆயுதத் தொடுவந்து
சேர்ந்தோ ரிடத்துறைகவும்
மாதயவி னெடுவேந்தர் திட்டமது செயல்வேண்டு(ம்);
மகிபன்முத் தையமதவேள்
மனதிலனு தினமு(ம்)நினை தரும்இமய மலைமனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௫. அரசர், நஷ்டமுறு பொருளைக் காத்தளிக்கும் இயல்பு]

சபர்பிலா தவள்,குலத் தாரிலாள், கற்புடைய
தையலாள், மைந்தனில்லாள்,
தக்கஇள மையனிவர்கள் தமதுபொருள் காக்குமொரு
தகைமையில் லாரெனினதைச்

சீருடன் காத்தருள்வ தும்,கிளைஞர் முதலினோர்
சேர்ந்தப கரிக்கின் அவரைத்
திருடரைப் போலவே தண்டிப்ப துந்தகும்;
திருடர்:எவர் பொருளையேனுஞ்
சோர்வுசெயி னதனைப் பிடித்தருள விலையெனில்,
துன்னுதன் பொருளிலேஅச்
சோர்வான பொருளினுக்(கு) ஈடளிப் பதுதகும்
தூயஅர சர்க்கென்பர்காண்;
வார்தரு மதுக்கொன்றை யணிகின்ற சடிலனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்) நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௯. அரசன் தானே விசாரணை செய்யத்தக்கவை இவை யெனல்]

அயலவ னுடைமனைவி யைச்சேர்தல், கொலைசெய்தல்,
அரசன்ஆ ணையைநீக்குதல்,
அனலிடுதல், வருணங் கலத்தல்,ஏ லாதமொழி
அறைதல்,வழி யைக்கெடுத்தல்,
பயிரழித் திடல்,இறைப் பொருளினுக்(கு) இடையூறு
பண்ணல்,சூ லினையழித்தல்,
பார்மன்னன் உட்கருத் தினைவெளிப் படமொழிதல்,
படைகொண்(டு) அடித்தல்,திருடல்,
இயலுமிவை போலுமெத் தனையேனுஞ் செய்தவரை
எழிலான வேந்தரானோர்
எதிராக வருவித்து மிகவிசா ரணைசெய்தல்
ஏற்றகா ரியமென்பர்காண்;

வயல்கொண்ட செந்நெல்விளை மங்கைநகர் தன்னில்வளர்
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்) நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [எ. அரசன் வினவுபொழுது விவகாரஞ் சொல்லத் தக்கவர் இவர்எனல்]

இறைபவன் சபைதனி லிருந்துவந் துப்பணிந்(து)
எதிர்நிற்கு மவனைநோக்கி:
"யாவனால் எவ்விடத்(து) எப்பொழுதில் எதினால்
ஏற்படு விவாதமதுநீ
உறுதியுடன் அஞ்சாது சொல்" என்று வினவுபொழு(து)
உற்றகா ரியமுடையரே
உரைசெய்க வேண்டுமென நியமமிலை அவர்தமக்(கு)
ஒத்துரிய மித்தமிகவுந்
திறமுடைய தங்கை,தமை யன்தம்பி, நண்பினன்
சேர்கிளைஞர் இவருத்தரஞ்
செப்புதற்(கு) ஆகும்,எதிர் வாதிக்கும் இம்மென்று
தேர்ந்தமுநி வோர்மொழிவர்காண்;
மறையவன் சுருதியாற் புகழ்கின்ற தேவனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்) நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [அ. அரசன் அப்பொழுதே உத்தரங் கொடுக்குமியல்பு]

பொன்,பூமி, அரிவை,கற வைப்பசு, எருது,கொடுமை
பொருள்வைப்பு, பெருமையழிவு,

பொய்ச்சான் றுரைத்தல்,மா தர்கள்நிந்தை, கொளல்,விற்
புறநீக்கல், பாவியென்றல், [றல்,
வன்செய்கை, கலகம், திருட்(டு),அச்ச முதலான
வைகளால் ஒப்புக்கொளல்,
வசனித்து வந்தஇப் பதினெட்டு வகையினுல்
வருவிவா தந்தனக்குப்
பின்னென்று சொல்லாமல் அப்பொழுது நீதியொடு
பேசியுத் தரமளித்தல்
பெருமைபெறு வேந்தருக்(கு) அழகென்று முனிவோர்கள்
பேசுமொழி நிலைமையன்றோ?
மன்னவர்கள் புகழ்கின்ற குணமுற்ற கெம்பீர
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[கூ. அரசன் சபையில் அழைக்கத்தக்கவர் இயல்பு]

உன்மத்தன், நோயினன், முதியன்,மத் தன்,துக்கம்
உடையவன், மாதர்இவர்கள்
உரைசெய்யும் எதிர்வாதி யாகின்மன் னவர்சபையில்
உறுதல் தகுந்தகாதும்
உன்னிவரு விக்கவேண் டும்;வலிமை யாளனை
யுகந்தழைக் கும்போ(து)அவன்
ஒன்னலர்க ளால்,அழலி னுல்,திருட ரால்மன
முடைந்(து)அழைப் பதைமறுக்கின்,
அன்னதற் குத்தண்ட மில்லை; செருக்குற்(று)
அழைப்பதை மறுக்கின்பணம்
ஐம்பத்து நூறும்,ஐந் நூறும்இவை தக்கபடி
அமையுமே தண்டமென்று

மன்னுபுகழ் கொண்டமுநி வோர்களுரை செய்வர்காண்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௧0. அனுபோகம் உறினும் அடையாதது இதுவெனல்]

"மகிபதி யொருவனுடை வூர்கள்முதல் விளைபூமி
மற்றொருவ னுக்குமுனிவால்
வஞ்சத்தி னலளித் ததும்,இரவ லாகவே
வாங்கினதும், ஒருவன்' இன்னோர்
அகமளித் திடும்' என்று மற்றொருவர் கைதனில்
அளித்தபொரு ளும்,உடையவன்
அறியாமல் அனுபோகஞ் செய்வதும், காப்பதற்
காகக்கொ டுத்தஅதுவும்,
தகுதியில் லாமற் கவர்ந்ததும், துட்டனால்
தந்ததும், அனேககாலம்
தான்மிக்க அனுபோகஞ் செய்கினும் செய்தவர்கள்
தம்மையடை யா(து),உடையரே
மகிழ்வினொடு பெறுவர்" என நாரத ருரைப்பர்காண்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௧௧. ஆகமம் என்பதும், அனுபோகம் என்பதும்]

"தனையரில் லாததா யாதல்முத லாகினோர்
தங்களால், சௌரியத்தால்,
தானத்தி னல்,தந்தை யால்,கண் டெடுப்பதால்,
தக்ககிர யத்தால்,வரு

மனைவியா(ல்) அடைவ(து)ஆ கமமாகும்; இவ்வாக
மத்தோடு கூடியதுவும்,
மத்தியில் விடாதது நெடுங்கால முடையது(ம்),
மறுக்குமொழி யில்லாததும்,
முனிவுதரும் எதிர்வாதி யர்க்(கு)எதி ரமைந்ததும்
மொய்த்தஅநு போகமாகும்;
முப்பதாண் டுடையது நெடுங்காலம் ஆகும்'' என
மொழிவர்மா முநிவர்கண்டாய்;
மனைதொறு நிதஞ்சுப முழக்கமுறு மங்கைநகர்
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[கஉ. நிலமுதலிய அநுபோக சோதனை]

" ஆற்றலுறு நிலமுதலி யவைகளின் விவாதத்தில்
ஆண்டுநூற் றைந்துக்குமேல்
ஆனஅநு போகமெனில் ஆகமம் விரும்பாமல்
அநுபோக மேபெரியதாம்;
தோற்றமநு போகத்தின் அங்கம்வே றாகினுஞ்
சொன்னஅவ் வாண்டினுக்குள்
தொடர்வான வநுபோக மாகினுஞ் சந்தேகஞ்
தோன்றுபொழு(து) ஆகமத்தைச்
சாற்றுநற் சான்றினர்க ளால்,அல்ல(து) எழுதுலிகி
தத்தினால் உணர்தல்வேண்டும்;
தருமாக மம்வேர்கள் அநுபோக மேயெலாந்
தாவுகிலை'' என்பர்முநிவோர்;
மாற்றரிய வரமுதவு கின்றவொரு வள்ளலே!
மகிபன்முத் தையமதவேள்

மனதில்அனு தினமும்(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [கந. இவரைத் தகையலாகாது எனல்]

வாதிதன் னுற்சொலத் தக்ககா ரியமதனை
மனமுறு(து) ஏகியஎதிர்
வாதிதனை வேந்தன்ஆ ணையினால் தடுப்பதனில்
மத்தர்,உன் மத்தர்,முதியோர்,
தூதர்,உழ வோர்,மூடர், அயலவன் றன்னுற்
சுமத்துவிவ காரம்உற்றோர்,
துக்கமுற் றோர்,"கண்ட வுடன்வருகு வேன்"எனச்
சூள்உரைத் தோர்,துறந்தோர்,
தீதுசெயு நோயால் வருந்துவோர், அரசனது
செய்கைதனி லேயிருந்தோர்,
சிறுவர்பண் ணியம்விற்கும் அப்பொழுதில், வணிகர்,இத்
திறவரைத் தகையலாகா;
வாதுபுரி காளியுடன் ஆடுநற் பாதனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [கச. இப்பொழுதில் தகையலாகாது எனல்]

"வெள்ளங் கடக்கின்ற பொழுதும்,வெஞ் சமரிடை
மெலிந்தபொழு தும்,திருடரும்
மிருகமு மிகுந்தவனம் அதிலேகு பொழுதும்,ஒரு
வேள்விபுரி கின்றபொழுதும்,
கள்ளர்-கனல் இவையால் நலிந்தேகு பொழுதும்,
கடியபோர் புரிபொழுதினும்,

கடிமணம் புரிகின்ற பொழுதும்,ஓர் ஆலயங்
கருதியே குடும்பொழுதினும்,
விள் அரிய நீர்கொண்டு வாமுயன் றிடுபொழுதும்,
விதைவிதைக் கின்றபொழுதும்,
விரதமுற் றிடுபொழுதும், ஒருவரைத் தகையாது
விடல்வேண்டும்,'' என்பர்கண்டாய்;
மள்ளர்உழு கொழுமுனையில் மணிசிதற மங்கைநகர்
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௧௫. சான்றினுக்கு ஆகாதார் இவர் எனல்]

உரைசெய்விவ காரியர்க்(கு) உரியஅனு கூலனோ(டு)
உறவினன், பிணையன்,அடிமை,
உபதேச குரு,விவா தப்பொருட்(கு) உடையவன்
ஒருபட்சர் இவராதலால்;
எரியிடு பவன்,சினத் தன்,பதிதன், உறுகோள்
இயம்புவோன், விடமளிப்போன்,
இசையாக் கொடுந்தொழில் செய்பவன், தந்தைதன்
னிடத்தினில் வழக்காடுவோன்,
கருதல ரிடத்திலுறை வோனிசிதர் இவர்அதி
கடுங்கொடுமை யாளர்அதனால்
கழறும்இவர் தமையெலாஞ் சாட்சியென் றேமிகக்
கருதார் தெளிந்தமிக்கோர்;
மருவுலா வியதும்பை மாலையணி லோலனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [கசு. இதுவும் அது]

பணிசெயும் புலவர்முத லானசிற் பியர்,புகழ்வர்,
பாடுவோர், தம்மனைவியைப்
பலர்பால் விடுத்(து) அதிற் சீவனஞ் செய்குவோர்
பால்-புலால்- சிற்றுண்டி-நெய்-
உணவு-மது விற்கின்ற பேர்,கூத்தர், வட்டியால்
உய்பவர்கள்: இவர்பொருளின்மேல்
உயர்(வு)ஆசை யுடையாத னுலும்; தரித்திரர்கள்,
ஓயாது நடையுற்றவர்,
பிணியர்,அதி விரகர்,மது வுண்டோர், மயங்குவோர்,
பெண்காணர், நிலைமைஅற்றோர்,
பேசும்இவர் மதியீனர் அதனுலும், இவர்களைப்
பிரியமொடு சான்றியம்பார்;
மணிதிகழு மலையில்வரு விடம்உண்ட கண்டனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [கஎ. சான்றிற்கு உரியவர்]

"தொழில்பொருள் பழிப்பின்மை, அறமோர்தல், நற்குலம்,
தூய்மைஇல் லறஇயற்கை,
சுதருடைமை, அறிவுபர வசமின்மை, உண்மைமொழி
சொலுதல்,நன் னெறியொழுகுதல்,
வழுவில்குண மிவையுடைய பேர்மூவர் முதலாக
வாய்த்தபதி னெருவர்வரையும்
வண்மையுறு சான்றினுக்(கு) உரியரா வார்இவர்கள்
வைகும் இடத்திலாதப்

பொழுதுவன் செய்கை-தண் டக்கொடுமை- கடன்முதற்
பொருள்விடயம் இவைநேர்ந்திடின்
பொருவிலா எவரையுஞ் சான்(று)எனக் கொள்ளல்
பொருந்தும்''என் பார்முனிவர்காண்;
மழுவினொடு மான்ஏந்து கையனே! தூய்யனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௧அ. சான்றினர் சோதனை]

''நெற்றியில் வியர்த்தலும், கடைவாயை நக்கலு(ம்),
நின்றஇட நில்லாமலும்,
நேரான முகவடிவு மாறலும், காலால்
நிலங்கீற லும்,சரீரம்
முற்றுமே உதறலும், அடுத்தடுத் துப்பெரு
மூச்செறித லும்,பூமியில்
முகம்வளைத் திடலும்,உத டினைமெல்ல லும்,பேசு
மொழிமாற லும்,வேறொரு
குற்றம்இலர் போலவும் காரணம் இலாமலே
கூப்பிடலும், இவைகள்போலும்
கொண்டசான் றினரையோ சனைசெய்து, வஞ்சரேற்
கொள்ளாது விடுக''என்பார்;
''மற்றனை விடேன்''என்ன அருள்புரியும் வள்ளலே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [கசு. சான்றினர் வரு மேன்மையும் இழிபும் அறிவித்தல்]

"உண்மையது சொல்பவன்: புவிமீது சம்பத்தும்,
உயர்தான மும்,தருமமும்,
உற்றதவ முஞ்செய்த பலனுமுடை யவனுகி,
உலகத்தி லுள்ளோரெலாம்
'திண்மைஉறு தெய்வவடி வினன்'என்ன, மறுமையில்
திவ்யகதி யும்பெறுகுவன்;
தீமைஉறு பொய்ச்சான்(று) உரைப்பவன்: பிரமவதை-
சிசுவதைசெய் திடுபாவமும்,
நண்ணிஎழு பிறவியிற் செய்தபுண் ணியமெலா(ம்)
நாசமுற்(று), எழுமரபொடு
நரகத் தழுந்தி,மறு பிறவியிற் பன்றியா(ய்)
நாயாய்ப் பிறப்பன்" என்றே
வண்மையொடு சான்றினர்க்(கு) அறிவித்த லதுவேண்டு(ம்);
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவணிதை
மருவுபழ மலைநாதனே!

## [உ0. சான்றினரை வினவல்]

சான்(று)உரைக் கின்றவே தியரை: "நீ பொய்சொலின்
சத்தியத் தால்உனக்குத்
தக்கபுண் ணியம்அழியும்" என்றும்,ஒரு சட்திரியர்
தமை:"நீபொய் சொலின்உனக்கு
மேன்மைதரு வாகனமும் ஆயுதமும் உதவாது
விடும்"என்றும்; வைசியர்தமை,
"மேவிநீ பொய்சொலின் உமக்குவரு திரவியமும்
விதையும்,ஆ டும்,பலிப்புத்

தோன்றாமல் அழியும்'' என் றும்; சூத் திரரை:=‘பொய்
சொலின்,=நீ உனக்குமித்திரத்
துரோகமும், கொலைபாவ மும் வரும்'' என்றுமுன்
சொல்லி“மெய் சொல்!'' என்பர்காண்;
மான்மழு சூலம்உறு கையனே! மெய்யனே!
மகிமன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

### [உக. சான்று உரைக்கு மியல்பு

தலையின் சரத்தையுங் காலிலணி காப்பையுந்
தள்ளியுத் தரிகம்உபவீ
தம்போ லணிந்து, கிழக்குமுக மேனும்உத்
தரவதன மேனு(ம்) நின்றே
இலகுபொன் கோமய நாணலிவை கையினில்
எடுத்துயிர்க் கொலைதனக்கே
ஈச்சுரன் சந்நிதியி லேனு(ம்), அந் தணர்சபையி
லேனுமறு விடயங்களுக்(கு)
உலகுபுகழ் மன்னன்உறு சபையினில் தான்கண்ட
உண்மையைச் சொல்வ(து) அல்லால்
உணர்வுடன் பொய்ச்சான்(று) உரைப்பவர்க் குப்பாவம்
உறையாது நீங்கிவிடுமோ?
மலயமுனி புகழ்கின்ற விடமுண்ட கண்டனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலையனிதை
மருவுபழ மலைநாதனே!

### [உஉ. பொய்ச்சான்று உரைப்பவர் கொடுக்குந் தண்டங்கள்]

"நியமஞ்செ யாமல்,அழை யாமல்,வின வாமலே
நேர்வந்து சான்றுரைப்போர்:
நிந்தையொடு பாவமுற் றப்பொருள் தண்டமு(ம்)
நேர்குவார்; பொய்ச்சாட்சியை
நயமுற்ற பொருளாசை அச்ச(ம்)நட் பிவையினல்
நவிலுவோர்: பணமாயிரம்;
நாரியர்கள் மீ(து)ஆசை யாலுரைப் பவர்:பணம்
நாடுமா யிரம்;முனிவினல்
தயவின்றி மொழிகுவோர்: ஏழுநூற் றைம்பதும்;
சார்ந்திடு மயக்கத்தினல்
சாற்றுவோர்: இருநூறு பணமுமே தண்டங்கள்
தருவார்கள்" என்றமிக்க
மயலகன் றிடுகாத்தி யாயனன் உரைத்தனன்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

### [உ௩. மறு விசாரணை செய்யு மியல்பு]

இரவினு(ம்), நகர்க்குவெளி யினும்,ஒன்ன லாரிடத்
தினும்,இல்லி னுள்ளு(ம்),மாதர்
இடத்தினு(ம்), மிகுரகசி யத்திலு(ம்), நிச்சய
மியம்புவிவ காரத்தினும்;
பொருளாசை, பகை,வலிமை யிவையினு(ல்) நிச்சயம்
புரியும்விவ காரத்தினும்,
புத்தியிழி வொடுபட்ச பாதமுண் டாமிவையும்
புகழ்மேவு தானமின்றிப்

பாரிய குலக்குழுவி னோர்கள்முத லானகீழ்ப்
படியான தானத்துளோர்
பண்ணுநிச் சயநன்மை யாகவே காணப்ப
டாதபோ(து) இவையுமறுகால்
மாடான மேன்மையர் விசாரணைசெய் திடல்வேண்டு(ம்);
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [உச. சபதஞ் செய்யு மியல்பு]

இருபத்து குன்றியிடை கொண்டபொன் னொருநிட்கம்
இதனிலொன் றுக்குள்ளுமோர்
எட்டுமா மீதும்உறு விடயத்தில் அந்தணர்:
இயம்பும்ஓர் உண்மைமொழியால்
வருபுண்ணி யந்தம்மை யடையாது விடுகஎன
வசனித்தல்; சட்திரியர்:தம்
வாகனமும் ஆயுதமும் உதவா(து) எனச்சொல்லல்;
வைசியர்:"பசு, விதை,பொன் இவை
பெருகா(து)" எனச்சொலல்; சூத்திரர்: கலப்பையாற்
பேர்க்குமோ டெள்ளு வெள்ளிப்
பிறங்குபொன் அறு(கு)இவையி லொன்றேந்தி: எல்லாட்
பெரும்பாத கங்கள்தம்மை
மருவஎன மொழிதல்சப தங்கள்என மொழிகுவார்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [உரு. இவ்வளவு பொருட்கு மேலாகின் இவ்விதத் திவ்வியம் எனல்]

உத்தமர்க்(கு) ஐம்பது நிட்கமேல் விடதிவ்யம்;
ஒருமுப்ப தேழரையின்மேல்
உற்றஅக் கினிதிவ்ய(ம்); முப்பத்து மூன்றின்மேல்
உதகதிவ் விய(ம்);இருபதோ(டு)
ஒத்தவைந் தின்மேல் துலாதிவ்யம்; ஐந்நான்கின்
உயர்தத்த மாடதிவ்யம்;
ஒருபதின் மூன்றுக்கு மீதுகண் டிலதிவ்யம்;
ஒத்தஎ ழரையின்மீது
தத்திவரின் நற்கோச திவ்யம்;ஐந் தின்மீது
தருமசதி வியநான்கின்மேல்
சார்ந்தபசு வுக்குநற் பாலதிவ் யம்;தரும்
சாற்றுதொகை யிற்பாதியேல்
மத்திமர் தமக்(கு),அதிற் பாதிஅத மர்க்கென்பர்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [உசு. இவர்க்கு இவ்விதத் திவ்வியம் ஆகாது எனல்]

மறையவர்கள், விஷவயித் தியர்இவர்க் கோர்விடமும்;
வன்குருடர், செவிடர்,பேடர்,
வலியிலர், விருத்தர்,அடி படுபர், பிணியர்,சிறுவர்,
மாதிவர் தமக்குவிடமும்;
நிறைசலமும் அனலுஞ் சுவாசபந் தனர்,நிதமு(ம்)
நீரினுழல் வோரிவர்க்கு(ம்);
நீருமனு வர்க்கனலு மிகுபாவர், பரலோக
நிலையில்லை யென்பரிவருக்

கறைகின்ற கோசதிவ் வியமிவையு மிருகாற்(று)
அடிக்கும்வே ளைத்துலாமும்
அம்மழை பெயுங்காலும் விடமும்வே னிற்கால(ம்)
அக்கினியு(ம்) களிர்காலமே
மறிதிரைப் புனலுமித் திவ்வியமு(ம்) ஆகாது;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [உஎ. பிணைக்கு உரியரல்லார் இவர் எனல்]

"தலைவனுக்(கு) உள்ளான பேர்,பகைவர், சந்யாசி,
தண்டங்கொ டுக்கின்றபேர்,
தருபொருள் அளிக்குமொரு திறமிலா தவர்,காவல்
தனிலிருப் போர்,ஞாதியர்,
நலமுற்ற அரசர்கா ரியமதி லிருப்பவர்,
நயிஷ்டிகப் பிரமசாரி,
நண்பர்குற் றஞ்செய்த பேர்,வஞ்ச முற்றபேர்,
நவிலுமொழி நிலைமையில்லார்,
தலம்இதென் றறியாத பேர்,அன்ய தேசமே
சஞ்சரிப் பவர்இவர்களைத்
தனமாதி பிணையினுக்(கு) உரியரல் லார்"என்று
சாற்றுவன் காத்யாயனன்;
மலைவுற்ற அடியேனை ஆளும்ஒரு சோதியே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [உஅ. பிணைபட்டவர்க்குக் கொடுக்கு மியல்பு]

கடனுடை யவன்வேறு தேசவா சஞ்செயின்
காட்டும்அப் பிணையனுக்குக்
காலவள வதுகொடுத் திடல்வேண் டும்; அதிலவன்
கண்டே யழைத்துவந்து
திடனுடைய தனிகனுக்(கு) ஒப்பித்தல் வேண்டும்; இது
செய்யாது விடினும்அனையன்
செத்துவிடி னுஞ்சொன்ன பிணையன்அக் கடனைச்
செலுத்தல்வேண் டும்; சுதர்க்குத்
தொடர்வில்லை; அன்றிப் பொருட்பிணையன் மாணம்உறின்
சுதர்அப்பொ ருட்(கு)உத்தரம்
சொல்லல்வேண் டும்; பௌத் திரர்தமக்(கு) அத்தொடர்வு
சூழாது நீங்குமென்பார்;
வடகிழலில் முனிவருக்(கு) அருள்செய்த போதனே!
மகியன்மூத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தருநம்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [உக. தலைவர் இயல்பு]

"அன்னையொடு தமயன்-பிதாஇவரை யுள்ளவன்,
அடுத்துப் பிழைக்கின்றவன்,
அரிவை,சீ ஷன்,பதி னேழ்வய தினுக்குளான்,
அவனடிமை இவ்வறுவரும்
உன்னியொரு காரியஞ் செய்யின்அவர் தலைவர்அதை
ஒவ்வாத போதுநீங்கும்;
உன்மத்தன், அச்சமுற் றோன்செய்த காரியம்
உயர்வேந்த னால்விலகிடும்;

சொன்னஅறு வரைமுதல்வ ராகஙிய மிக்கபின்
தோன்றுகரு மங்களெல்லாம்
தொன்மையா கியதலைவ னேசெய்த தாகும்'' எனச்
சுரர்குரு மொழிந்ததன்றோ?
வன்னமயில் வாகனனை யீன்றசக ரட்சகா!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௩0. வட்டி வாங்கும் இயல்பு]

"நன்றியுறு நேயனால் ஈந்தவொரு பொருளிற்கு(ம்)
நவில்சாரக் குக்கொண்டபின்
நாடுதே சாந்தரம் போனவன் பொருளிற்கு(ம்)
நாலுட னிரண்டுமாதம்
சென்றபின் னும்பணதி முதலான பொருள்வாங்கித்
தேசாந் தரத்(து)ஏகிடின்,
செலவருடம் ஒன்றின்மே லுஞ்சேர்ந்த வூரிற்
சிறந்திருந் தங்கேட்டபேர்
ஒன்றினு மளித்திடா தொழியின்கொ டுத்தநாள்
ஒத்தும்வாங் கிடவட்டி'' என்(று)
உண்மையுணர் நாரதன் காத்தியா யனனிவர்
உரைத்தமொழி நிலைமையன்றோ?
மன்றல்கமழ் கொன்றைபுனை செஞ்சடா டவியனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை

[ருக. வட்டி யில்லாத விடயம்]

"வேதனப் பொருள்,பிணைப் பொருள், வேந்தர் தண்டம்
விதித்தபொருள்; நட்பினர்க்கு
விசுவாச மாகக் கொடுத்தபொருள், வட்டிநிலு
வைப்பொருள், விடக்ருப்பொருள்,
சீதனப் பொருள்,நியாசப்பொருள், கடன்செலுத்
திடவந்த போதுதனிகன்,
செப்பும் வழக்கால் மறுத்ததனை நடுவர்கண்
சேர்த்ததின முதலப்பொருள்,
கோதில்அனு போகம்உறும் ஈட்டின்மேல் வாங்குபொருள்,
'கொள்சரக் கின்விலையினைக்
கொடும்,' என்று கேளாத வரையுமப் பொருளுறவு
கொடுத்தபொருள், இவைகட்கெலாம்,
மாதவத் தோர்வட்டி யில்லை" என் றேமொழிவர்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[ருஉ. புத்திரர்: பிதாவின் கடனைக் கொடுக்கு மியல்பு]

"கடனுற்ற தந்தை:நற் றிறமற் றிருக்கினும்,
கனநோயி னுல்மெலியினும்,
காண்அரிய பரதேய மாகிஇரு பதுவருட
காலமா கினும்,வீயினும்,
திடன்உற்ற மைந்தர்அக் கடனளவு மையந்
தெளிந்தளித் திடுவதென் றாஞ்
செப்பிய பிதாவினொடு சிலமைந்தர் பாகம்அது
தீர்ந்(து)அய லிருக்கமற் றோர்

உடன்உற்று வாழ்ந்திறந்(து) அப்பிதா வின்கடனை
ஒத்துவாழ்ந் தப்புதல்வரே
ஒப்பிக்கொ டுத்திடுவ(து)" என்றுமா முனிவர்கள்
உரைத்தமொழி நிலைமையன்றோ?
மடன்உற்ற அடியேற்கு வரம்உதவு சோதியே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௫௫. புத்திரர்: பிதாவின் கடனைக் கொடாத இயல்பு]

கள்ளுண்டல், சூதாடல், விரகத்தி னால்நிலை
கடந்தமெல் லியர்தமக்குக்
கையெழுத் தாலேனு(ம்) மொழியினா லேனும்ஒரு
கடனாக ஒப்புக்கொளல்,
விள்அரிய இவையினில் தந்தைபடு கடனையும்,
வேறுதே யத்தில்அறிய .
மேவுதந் தைக்கடனை யும்புதல்வர் ஈபார்;
விளம்பும்இவை யன்றிபிறவித்
தள்அரிய குருடாதி ஈனமைந் தரும்வயது
சார்ந்தபதி னாறளவுநல்
தனையரும் அருகிலுறி னும்பிதா வின்கடன்
தனையளித் திடவொணார்காண்;
வள்ளல்என வருபொங்க நாடேந்தி ரன்சுகுண
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௩ச. பௌத்திரர்: பாட்டன் கடனைக் கொடுக்குமியல்பு]

"தந்தையை யளித்தமூ தாதைதே சாந்தரந்
தனிலேகி னும்,வீயினும்,
சந்நியா சம்பெறினும், அவனுடைய கடன்அவன்
தனையன் கொடுப்பதற்குச்
சிந்தைமகிழ் திறமிலா தவனாகின் உறுபௌத்
திரன்வட்டி யின்றியதனைத்
தீர்த்தல்வேண் டும்;கள் குடித்தன்முத லவையினாற்
சேர்ந்திடுங் கடனையியார்;
அந்தப் பௌத்திரர் அளித்தசுதர் தம்முடைய
அப்பன்மூ தாதைப்பொருள்
அடையாது விடின்அவன் கடனைக்கொ டார்"என்ன
அருள்உற்ற முனிவோர்களால்
வந்தமொழி யென்றுணர்(வு) அறிந்தவர் புகன்றிடுவர்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௩ரு. இன்னார் பட்ட கடனை இன்னார் கொடுப்பது எனல்]

கணவனது கடனைமனை வியும்,மனைவி யால்வந்த
கடனை யவன்கணவனும்,
கருதுதா யும்தந்தை யும்புதல்வ ரால்வந்த
கடனையுங் கருதொணாது;
மணவாளன் மரணமுறு போது"நீ தீர்" என்று
வசனித்த கடன்மனைவிசர்
மதிகொளா விடினும்அவ னுடையபொரு ளினையடையின்
மனைவியே ஈதல்வேண்டும்;

கணைவிற்கொள் வேடர்,வண் ணார்,இடையர், கூத்தாடி,
கள்விளைஞர், செக்காரிவர்
காதலியெ னும்மனைவி படுகடனை யவளுடைய
கணவன்கொ டுத்தல்வேண்டும்;
மணிஅரவ பூஷணம் அணிந்தசக ரட்சகா!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௯௩. தலைவன் கடன் கொடுக்கும் இயல்பு]

"தந்தையின் உடன்பிறந் தோர்,சகோ தரர்,மைந்தர்,
தாயினொடு மனைவி,சீஷன்,
தனை அடுத் தோன்,வேலை யாளர்,இவ் எண்வகையர்
தருகுடும் பங்காத்திடுஞ்
சிந்தையொடு படுகடனை அத்தலைவன் ஈகவும்,
திரவியம் இலாததாயார்
சிலகடன் பட்டுநன் மாமன்முதல் அன்னியச்
செல்வரை அடுத்திருக்கின்
மைந்தன்அக் கடனைக் கொடுக்கவும், புத்திரரும்
மனைவியும் வேறுவிதமா
வாங்குகட னைத்தலைவன் இச்சையுறின் ஈகவும்"
மாமுனிவர் "வேண்டும்" என்பார்;
வந்தியர்கள் இசைபாட மகிழ்கின்ற தேவனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௫எ. கடன் வாங்கும் உபாயம]

தனிசன்கடன் வாங்கி னவனுக்கு நல்லமொழி
சாற்றிக்கொ(டு) என்றல், அவனைச்
சார்ந்தவர்க ளாற்சொல்லு வித்தபின் தொடர்தல், இவை
தலைமையாம் தருமஉபாயம்;
நனிநன்மை யுடனிரவல் எனவாங்கு பணியையு(ம்),
நம்பிஒரு வர்க்(கு)ஈகென
நல்குபணி யையும்,வாங்கி என்பொருட்(கு) ஈடென்று
நவிலுவது கபடவுபாயம்;
மனையினுள் அழைத்(து)அடிகள் முதலான வைசெயல்
வலிச்செயல் உபாய(ம்);மைந்தர்
மனைவியிவர் வெளியில்வா ராமல்மனை முத்திரை
வைப்ப(து)ஆ சரிதோபாயம்:
மனிதர்இவை யோசித்துச் செய்யும்இயல் இனிமொழிவன்;
மகிடன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௫அ. இதுவும் அது]

"தரணிமன் னவர்,முதல்வர், வேதியர்கள் இவரிடந்
தரும உபாயமு(ம்);நண்பினர்,
தாயாதர், வணிகர்,உழு வோர்,சிற்பர் இவரிடந்
தக்ககபட உபாயமும்;
பரவும்இழி வினரிடம் வலிச்செயல் உபாயமும்
பண்ணலா(ம்). நேராவிடின்
பகர்கின்ற ஆசரித உபாயஞ்செய் தேபொருட்
பற்றுவது நீதியாகும்;

உரைசெய்யும் இவையெலாம் அவரவர்கள் மேன்மையும்
உலகஇயல் பையு(ம்) அறிந்தே
உஞற்றுவது தரும்;அன்றி மனதின்ப டிச்செய்தல்
ஒவ்வா(து)"எனச் சொல்லுவார்;
மரகதக் கொடிபட்டருஞ் செம்பவள வடிவனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௩௰. கடனைத் தீர்க்காதவர் அடையும் பாவம்]

கடன்என்று வாங்கும்ஒரு பொருளைக் கொடாதவன்
கருதிச்செய் புண்ணியம்எலாம்
கடன்என்(று) அளித்தவனை அடைவதல் லாமலும்,
கடனைக்கொ டா(து) இறக்கின்,
'கொடியன்'என இம்மையிற் பேர்பெற்று, மறுமையில்
கோதிலா மாடாகவும்,
கூலியா ளாகவும், கழுதையா கவும்,எழிற்
குதிரையா கவும்,வேலைசெய்
அடிமையா கவும்,அரிவை யாகவும் சனனமாய்,
அத்தனிக ளிடம்உழைப்பார்;
ஆதலால், கடனென்ப(து) ஆகா(து)" எனச்சொலுவர்
அருள்உற்ற முனிவர்கண்டாய்;
மடல்விரிந் திடுகொன்றை அணிகின்ற தேவனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [சo. அடைக்கலப் பொருளைக் காத்தலால் வரும் பலனும், அபகரித்தலால் வரும் பாவமும்]

திருடர்முத லானவர்க்(கு) அச்சமுற் றத்தனது
சிந்தைமிக நம்பியொருவர்
செவ்விய குணந்தரும நன்னடை யுளனென்று
சேமஞ்செ யக்கொடுத்த
பொருளைவைத் துக்கொண்ட வன்,மனது புத்திரன்
போலவே காத்து,(உ)டையவன், [முதற்
'பொருள்கொ(டு)' என் றிடுபொழு தளிக்கின்,இர ணிய
பொருள்களைத் தானமாக
அருளிய பலத்தினோ(டு) அடைக்கலங் காத்தபல
னையும்அடைவன்; அபகரித்தோன்:
அன்பான மைந்தனையும் நண்பனையும் உயிர்செகுத்(து)
அடைகின்ற பாவம்அடைவன்;
மருள்தவிர்த்(து) எனையாளும் ஐயனே! மெய்யனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [சக. மேற் சொல்லிய பொருளைக் கொடுக்கும் இயல்பு]

ஒருவன் "வைத் திரும்" என்(று) அளித்தபொரு ளினைவாங்கி
உண்மையாய் வைத்திருக்க,
உள்ளபடி ராசிக தைவிகக் குற்றங்கள்
உண்டாகித் தனதுசொந்தப்

பொருளினெடு கெடுதியடை யின்வாங்கி வைத்தவன்
பொருள்அளித் திடல்ஒழுஞது;
புகலும்இக் குற்றங்கள் அன்றியே சோர்விஞற்
போக்(கு)உறின் அளித்தல்வேண்டும்;
தருபொழு(து) அளித்தவனை யல்லாமல் வேருெருவர்
தங்கையில் அளிக்(க)ஒழுஞது;
தந்தவன் மரணம்உறின் அப்பொருட்(கு) உரியவர்
தமக்குக்கொ டுத்தல்வேண்டும்;
வரம்உதவி அடியேனை ஆட்கொள்ளும் ஐயனே!
மகிபன்மூத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [சஉ. மேற்கூறிய பொருளை அபகரித்தவன் கொடுக்கும் இயல்பு]

"இப்பொருளை வைத்திரும்' எனக்கொடுத் ததைவாங்கி
இன்பமொடு வைத்திருந்தோன்
ஈந்தவன் கேட்டுக்கொ டாதிருந் திடுபொழு(து)
இராசிக மதைவிகத்தால்
அப்பொருள் அழிந்துவிடின் அதனுடைய விலையையுடை
யவனுக்(கு) அளித்தல்வேண்டும்;
அன்றிஅத னைச்செலவு செயின்வட்டி யுடனே
அளித்தல்வேண்டும்;கவர்ந்தால்
ஒப்பிஅப் பொருளைக் கொடுப்பதல் லாமல்,
உலகாளும் அரசனுக்கும்
உறுதண்ட முங்கொடுத் திடல்வேண்டும்" என்றுமுன்
உரைப்பர்முனிவோர்என்பர்காண்;

மைப்புயல் உலாவுபொழில் மேவும்ஒரு மங்கைநகர்
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [சரு. சந்தேகப் பொருள்]

"தகுதியில் லாதவ ரிடத்திலே னும்,தலைவர்
சம்மதியி லாமலேனும்,
தாழ்ந்தவிலை யாயேனு(ம்), மனையினுள் ளேனும், ஊர்ச்
சார்பிலா வெளியிலேனும்,
அகம்ஐயம் உறவிரக சியமாக வேனும்,
அகாலத்தி லேனும்,உரிமை
அல்லா ரிடத்திலே னும்கொள்வ திற்குற்றம்
அமையின்விற் றவர்,கொண்டவர்,
இகபரம் இலாததிரு டர்போலத் தண்டனையை
ஏற்பதன் றியும்,அப்பொருள்
எல்லாமி ழப்பர்,உடை யவர்அடைவர்" என்றுமுநி
யாஞ்ஞவற் கியர்மொழிவர்காண்;
மகரகே தனவைரி யானமுக் கண்ணனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [சச.உடனே வாங்கு பொருள்]

சரசபரி யாசத்தி லீந்த பொருளும்,
சலிப்பினால் ஈந்தபொருளும்,
தாயாதி மீதுகோ பத்தினால் அன்னியர்
தமக்குக் கொடுத்தபொருளும்,

தருமவான் என்றுமிகு பாதக னிடத்தினில்
தந்தபொரு ளும்,ஊதியம்
தனையுண்டு பண்ணாத வர்க்(கு) ஈந்த பொருளு(ம்) நோய்
சார்ந்தவர் அளித்தபொருளும்,
உரிமைஇல் லாஅடிமை முதலான பேர்களால்
உதவிசெய் திட்டபொருளும்,
உடனே நிறுத்தாமல் வாங்குபொருள்'' எனநார
தன்சொன்ன(து) உறுதியன்றோ?
வரிஉழுவை அதள்ஆடை புனைநீல கண்டனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௫௫. மாணாக்கன் இயல்பு]

"புகழ்கொண்ட இருபிறப் பாளன்உப நயனம்
புனைந்தபின் குருவிடத்தில்
புனிதமொடு பிச்சைபண்ணி உண்டும், அவ ருக்கும்அவர்
புணர்மனைவி யர்க்கும்என்று
மகிழ்புதல்வ ருக்கும்இழி வல்லாத பணிவிடைகள்
மனதொடு புரிந்(து), இருக்கு
மறையாதி வேதங்கள் மிகபடித் தேசமா
வர்த்தனஞ் செய்தவுடனே
தகுகின்ற குருவினது தட்சிணை அளித்துவிடை
தந்தருள்செய் திடவுகந்து
தன்மனையில் அணுகுவோன் மாணாக்கன் ஆம்''என்று
தவமுநிவர் மொழிவர்கண்டாய்;
மகரதனை வென்றிடு மகாதேவ தேவனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [சகூ. அணித்துறைவோன் இயல்பு]

"சிற்பமணி பொன்முதல் உலோகவே லையு(ம்)நடஞ்
சீர்கொண்ட கீதம் இவையும்
தெரியவேண் டின்,மனது வஞ்சம்இல் லாதநல்
தேசிக ரிடத்தில்ஏகிச்,
சொற்படி நடந்தும்,அவர் தண்டனைக்(கு) உள்ளாகிச்
சொன்னஒரு காலஅளவும்
சுதர்போ லிருந்துவே லையில்வந்த பொருள்எலாந்
துகள்இலா அத்தேசிகர்க்(கு)
அற்புதம் உறும்படி அளித்துவிடை செய்தவுடன்
அன்பொடு மனைக்குவருவோன்
அவன் இழுக்(கு) இல்லா அணித்துறைவன் என்றுபெயர்"
அறைவர்மா முனிவர்கண்டாய்;
மற்புயந் தனில்வில்வ மாலையணி லோலனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [சஎ. ஒப்பி வேலை செய்யாதவர் கொடுக்கின்றது]

காலிதனை மேய்ப்பவன்: இராசிக தைவிகம்
கள்ளர்இவை யால்அலாமல்
கண்ணேக்கம் இன்றிவரு மாட்டுநஷ் டத்தைஅக்
காலியுடை யோர்க்(கு) அளித்தும்,
காலஅள வினையேற் படுத்தும்ஒரு வேலைஅக்
காலமுடி யாதுமுன்னம்
கருதிச்செய் யாதவன் கூலியை யிழந்து(ம்)முன்
கையினிற் கூலிவாங்கி

வேலைசெய் யாதவன் அதற்(கு)இரட் டித்தபொருள்
மேவினந் தோர்க்(கு) அளித்தும்,
வேந்தனுக் குத்தக்க தண்டமும் அளித்தலே
வேண்டும்'' என் பார்முனிவர்காண்;
மாலையினில் வருசெக்கர் வானநிற வடிவனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[௬௮. சுமைக்காரர் இயல்பு]

"சும்மையா னதுசுமைக் கூலியா என்செய்த
சோர்வினற் கெடுதியடையின்
சுமைவிலைப் பொருளும்,வஞ் சத்தினற் கெடுதியடை
சூழ்ந்திடின் இரட்டிப்பும்அச்
சும்மையுடை யோர்க்(கு) அவ னளித்தல்வேண் டும்;சுமை
சுமக்கவொப் பிப்பயணமாம்
தொடக்கத்தில் ஒவ்வினது செய்யாத வன்கூலி
சொன்னதொகை தனில்ஏழில்ஒன்(று)
அம்முதல்வ னுக்குக் கொடுத்தல்வேண் டும்;பாதி
யானவழி யெனின்முழுதுமே
அளித்தல்வேண் டும்கூலி; ஆள்இலா இடமெனில்,
அதற்(கு) இரட் டிப்(பு)'' என்பர்காண்;
மம்மர்அணு கா(து)எனை அளிக்கின்ற தேவனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [சகூ. ஒப்பின கூலிக்காரனை நீக்கியவன் கொடுக்கும் இயல்பு]

தருசுமை யெடுக்கவுப் பாகியுறை பவனையத்
தருணத்தில் நீக்கிவிட்ட
தலைவன்மொ ழிந்தகூ லியில்ஏழி லொன்றாம்,அத்
தடனடுவில் நீக்கின் அந்தத்
தொகைமுழுதும் அவனுக்(கு) அளித்தல்வேண் டும்;சொன்ன
சுமைநடுவ ழியில்விற்கினும்,
சுங்கத்தி னாலே தடைப்படினும், வழியினது
தொகையின்மேல் ஈதல்வேண்டும்;
பகரும்ஒரு காலஅள(வு) ஏற்பாடு செய்ததில்
பாதிவே லையில்நீக்கினேன்,
பகர்கூலி முழுதையும் அளித்துவேந் தன்சொன்ன
படிதண்டம் ஈதல்வேண்டும்;
மகரகுண் டலம்இலகு காதனே! போதனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [ருO. அடிமை இயல்பு]

"மனம்ஒவ்வி அடிமையா னவர்கள்இய மானனது
மனையில்அசு சியைவிளக்கல்,
மலம்எச்சில் வாருதல், சரீரத்தி லேமிக
மறைக்குமிட முஞ்சொறியுதல்,
இனையவகை யும்,சவச மும்செய்த லேவேண்டும்;
இயமானன் உயிர்தனக்கே
இறுதிநே ரும்படி இசைந்தஆ பத்துவே
ளையில்இதயம் வைத்துமீட்ட

அனைய அடி மைக்(கு) அந்த அடிமையிய லினைநீக்கி
அருள்புதல்வர் பொற்பாகமே
அன்புடன் அளித்தலது வேண்டும்'' என முனிவோர்
அறைந்தமொழி நிலைமையன்றோ?
வனமாலி நான்முகன் வணங்கும்ஒரு தேவனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவணிதை
மருவுபழ மலைநாதனே!

## [ருக. அடிமையை விலக்கும் இயல்பு]

"அடிமையை விலக்கமன தாகின், அவர் தோளினில்
அமர்ந்தநிறை நீர்க்குடத்தை
அருகில்சிலர் அறிய இய மானன்வாங் கித்தகர்த்(து),
அக்ஷதை- புஷ்பம்-புனல்
முடியின்மிசை யினில்இறைத்(து), 'இவன் அடிமை அல்லன்'
மூன்றுரை இயம்பல்வேண்டும்; [என
முதல்வருணர் ஒருவர்க்கும் அடிமையா குதல்இல்லை;
மொழியும்இவ் வருணரானோர்
புடவிபுகழ் துறவுநிலை கெடின், அவர்கள் நுதலிற்
பொருந்தவே ஞாளியின்கால்
போல்எழுதி ஓட்டிவிடல் வேண்டும்'' என்றேமிகப்
புகலுவார் முனிவர்கண்டாய்;
வடகுவடு கிடுகி(டு)என நடனமிடு பாதனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தருஇமய மலைவணிதை
மருவுபழ மலைநாதனே!

## [ருஉ. கூடி மேம்படும் இயல்பு]

"அதிகதிர வியம்உளோர், நோயர், மூத லில்லார்,
அதிட்டமில் லார்இவர்களை

அன்றிபொருள் திறமை-சோம் பின்மை-நா ணயம்-வரத்
தழிவறிந்(து) ஒழுகல்-வலிமை
மதியுணர்தல் இவையுடைய ராகித் தமக்(கு)ஒத்து
வருபவருமா விழைந்து
வாணிகம்- வேள்வி- உழ வுத்தொழில்- கூத்தாடல்
வண்சிற்பம் இவைசெய்வதில்
சதிகெடுதி யாதொருவர் செயின்,அவரை மொழியினால்
தண்டனை புரிந்(து),ஊதியம்
தனிலொன்றும் ஈயாமல் விலகிடச் செய்வதே
தகும்" என்பர் முநிவர்கண்டாய்;
மதி-அரவு- நதி-தும்பை அணிசடில விமலனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௫௩. கூட்டுவாணிகஞ் செய்யும் இயல்பு]

"வாணிகம் பலர்கூடி செய்கின்ற போதொருவன்
மருவுபங் (கு)க்குஉரியர்சம்
மதியின்றி யுந்தடுக் கின்றதை மறுத்துந்தன்
மன(து)இச்சை யாச்செய்ததிற்
காணும்ஒரு நஷ்டத்தை யொவ்வா(து) அவர்க்கிவன்
கருதியொத் தருள்வேண்டும்;
கள்ளரால், தீயினால், வெள்ளத்தி னால்அழிவு
காணும்அப் பொருளையொருவன்
பேணிமீட்(டு) அதிலவன் பங்குரியன் ஆகினும்
பின்னும்அப் பங்கின்மீதில்
பிரியமொடு பத்தில்ஒரு பாகமும் பெறல்வேண்டும்"
என்றுபெரி யோர்மொழிவர்காண்;

வாணியிசை பாடமகிழ் மேவும்ஒரு தேவனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [ருச. கூட்டு வியாபாரம் செய்யும் இயல்பு]

மாடுவிதை பொருள்இவைக ளுடையவுழ வினர்பயிர்செய்
வண்மையது நன்குணர்ந்தோர்,
வஞ்சமொடு சோம்பல்இலர் பலர்கூட வேண்டு(ம்);மிக
வாமனமு(ம்), முதுமையும்,விரைந்
தோடலும், இளைத்தலும், ஒடிந்தகா லும்,பிணியும்
உடையபக டுகளைநீக்கி,
ஒத்துவரு பகடுகள் கொள்ளல்வேண் டும்;எலிகள்
உறைநிலம், இராசமார்க்கங்
கூடு(ம்)நிலம், உவர்நிலம் விலக்கிநலம் உறுநிலங்
கொண்டுபயிர் செய்தல்வேண்டும்;
குற்ற(ம்),மிகு சதி,கெடுதி செய்தவர்க்(கு) ஒன்றுங்கொ
டாமலே நீக்கல்வேண்டும்;
மாடு,மனை, பாரி,சுதர், மேவுகுடி வாழ்சுகுண
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [ருரு. பொருள் உதவும் இயல்பு]

மிகுசெருக் கினர்,மல்லர், பொருள்அப கரிப்பவர்கள்,
வேசைமே வினர்,வதனமுன்
மேவின்ஒன் றும்-பிரியின் ஒன்று(ம்)மொழி பவர்,தீய
வினையர்,விழை(வு) அற்றதூதர்,

தகுகேள்வி யிலர்,மருத் துவர்கள்புன் தொழிலினைச்
சார்ந்தஅத னல்இவர்க்குத்
தனம்அருளல் ஒவ்வாது; நட்பினர், தெளிந்தவர்,
தயாளர்,நற் குரவர்,மிடியர்,
செகமகிழு(ம்) மாண்புடைய பேர்,தத்,நம் வழிமுறை
செருக்கா(து) ஒழுக்கமுற்றோர்,
செப்பும்உத விபையுடையர் அதனு லிவர்க்குநற்
திரவியம் அளித்தலாகும்,
மகிமைபெறும் அடியார் தமக்கருளும் வள்ளலே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[ருஃ. எல்லை அடையாளம்]

"அகழ்,கிணறு, தூரவு,குளம், ஓடை,கற் குறடு,தே
வாலயம், புற்று,பள்ளம்,
அளவொடு திரண்டகல், வழிக்கரை உயர்ந்தநில(ம்),
ஆச்சா, முருக்கு,நாணல்,
இகழ்பனை, பலா,மூங்கில், ஆல்,அரசு, முள்இலவு,
சிறுபுதர்கள் இவைமேவினும்;
செங்கல்,உமி, கரி,கருங் காலிப், பிசின்,சங்கு,
சிப்பி,மணல், பானைஓடு,
தகுபருத் திக்கொட்டை, எருமுட்டை, பசுவின்வால்,
சாம்பல்,சுக் காங்கல்லொடு
சாற்றும்இவை பாண்டத்தி விட்டு;பூ மிக்குளும்,
தந்தம்ஊர் எல்லைமட்டும்
வகைஉறு குறிப்பாக வைத்திடுவர்" என்பர்காண்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௫௭. எல்லை வழக்குத் தீர்ப்பு]

"ஊர்எல்லை விவகார முறின்,வாதி யறிவிப்ப(து)
ஒவ்வஅனு மானமாகின்,
உற்றஅனு போகம்-ஆ கமம்-அளவு பெயர்இவை
யுணர்ந்தசான் றினர்கள்மொழியைத்
தேர்க! அவர் நிசிதர்எனில், உபயவா தியர்மனந்
தெளிவான ஒருவனுக்குச்
செம்மாலை- செவ்வாடை புனைவித்து, மண்ணையோட்
டிற்கொண்டு சிரசில்வைத்து,
நேர்மையுடன் எல்லையோ டச்செய்த நாண்முதல்
நிகழுநாற் பத்தஞ்சுமேல்
நிச்சயஞ் செய்க" என அமரர்குரு சொன்னமொழி
நிலைமையைக் கொள்வர்கண்டாய்;
வார்கொண்ட செஞ்சடா டவியனே! விமலனே!
மகிபன்முத் தையபாதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௫௮. மனைவியின் செய்கை]

மனைவிநற் கற்புநிலை தவறின் குலங்கெடும்;
மைந்தர்கெடும்; அக்கேட்டினால்
வானவர்கள் பிதுர்கள்யா கம்,தருமம் இவைகெடும்;
வளர்தருமம் அதுகெட்டிடின்,
தனதுபயன் எல்லாம் அழிந்துவிடும்; ஆதலால்,
தகுமாமி முதலானபேர்
சற்(று)எனினும் அயலா ரிடத்தின் மொழியாமல்
தடுத்தல்நன்(று); ஆடை,பணதி

மனம்உவந் திட அளித் தே,தெய்வ பூசைக்கு
வண்மையுறு பணிசெய்தலும்,
மனைவேலை செய்தலும், கற்பித்தல். எந்நாளு(ம்)
மனதுபிரி யாமல் அன்றோ?
வனசமலர் வாவிசூழ் மங்கைநகர் தன்னில்வளர்
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்) நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௫௯.மாதர்க்குச் செய்யும் இயல்பு]

"மெல்லியர்கள் அன்னை குலத்தினால் நலம் அடையின்
மிகவும்அக் குலம்விளங்கும்;
வியாகுலம் உறின்மிடியு மாம்;இக் குலத்திற்கு
மேவும்இஃ தேயாதலால்,
மல்லல்உறு கலியாண வுற்சவ தினங்களிலு(ம்)
மனமகிழ அவர்தமக்கு
மகிழ்நன், கொழுந்தன்,மா மன்,மாமி, தாய்,தந்தை,
மற்றைய கிளைஞர்களும்
நல்லவத் திரம்,உணவு, பணிஅளித்(து), உபசாரம்
நவிலப் பொருந்தும்" என்றே
நன்குணர்ந்(து) உரைசெய்த மநுவின்வாக் கியமென்று
நாவலர்கள் மொழிவர்கண்டாய்;
வல்லமைகள் பெறுமேட்டி பாலகோத் திரசகுண
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்) நினை தரும்இமய மலைவனிதை,
மருவுபழ மலைநாதனே!

[௯0. கணவனோடு பகைத்த மனைவிக்குச்
செய்யும் இயல்பு]

உன்மத்தன்-மகிழ்விலான்-அதிபாவ நோயின
னொடுபதிதன், வெறியன் அன்றி
உத்தம குணப்புருட னொடுபகைசெய் மனைவியை
ஒருவருடம் வரையுநோக்கி,
துன்மனப் பகைவிடாள் எனின்,ஈந்த பணியையும்
துகிலையும் வாங்குவித்துச்,
சுகமொழியை யும்,புணர் வையும்விலக் கல்தகும்,
தோகைமட வார்புருடர்தம்
நன்மனது, நற்செய்கை, வடிவு,யௌ வனம்இவையை
நயவாமல் ஆண்தன்மையே
நயந்துமரு வுங்குணத் தாலவர் தமக்குரிமை
நல்கா(து) அடக்கலாகும்;
வன்மனத் தவர்அறிய வொண்ணாத மூர்த்தியே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்) நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[௯௧. கற்புநிலை தவறின மனைவியர்க்குச்
செய்யும் இயல்பு]

"கற்புநிலை விலகுற்ற மனைவியைப் பிராயச்சித்த
காண்டவிதி செய்யுமளவும்
காத்தல்வேண் டும்;வெளிப் பட்டவள் எனின்,புனித
காரியந் தனில்விலக்கி:
நற்றலை மழுக்கி,இழி வானவுண வும்,துகிலு
நல்கி;நில மேற்றுயிலவும் -

நண்ணிய அசுத்தநிலம் அதுசுத்தி செய்கவு(ம்)
நவின்று,மனை தனில்ஓரிடத்(து)
உற்றிடும் படிசெய்தல் வேண்டும்;இழி வானவர்க
ளொடுமருவின், அவளைவெளியில்
ஒதுக்கிவிடல் வேண்டும்'' என நாரத மகாமுநி
உரைத்தமொழி நிலைமையன்றோ?
மற்பணதி யெனஎன்பு புனைகின்ற தேவனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைமனிதை
மருவுபழ மலைநாதனே!

[கூஉ. இவ்வித மனைவியரை ஒழித்து மறுமணம் புரிவது எனல்]

''மதுவுண்டல்,பொருள்அழித் திடல், கொடுமை செய்தல்,மிக
மாறுபா டேசெய்குதல்,
மகிழ்நனை விரோதித்தல், அன்னியர்கள் மிகவும்
வருத்தம்உற வேசெய்குதல்,
இதம்இலா மொழியுரைத் திடல்,இந்த விதமுற்ற
இயல்இலா மனைவியர்களை
இணங்குவதும், இயலுவதும், மனையின அதி காரமும்
எல்லாம் விலக்கி,அயலில்
வதிகப் புரிந்(து),ஆடை யுணவளிப் பதும்அன்றி,
மனதிற்(கு) இயைந்தநல்ல
மறுமடந் தையைமணம் புரிவதே புருடர்க்கு
வளமான செய்கையென்பார்.'
மதனை நுதல் விழியால் எரித்தருளு(ம்) நீதனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௬௩. இவ்வித மனைவியர் இருக்க மறுமணம் புரிவது எனல்]

மலடிக்(கு)ஓர் எட்டுவரு டமும்,இறக் கின்றவீன்
மதலையைப் பெறுபவட்கும்-
வருகரு அழிந்திடு பவட்கும்ஒரு பத்துவரு
டமு(ம்),மகட் பெறுபவட்குப்
பலன்அற்ற பதினொன்று வருடமுஞ் சென்றுநற்
பாலர்பே றில்லையாயின்,
பண்புற்ற வேறுவனி தையைமணம் புரிவதே
பான்மை;முன் மனைவியர்க்கு
நலன்உற்ற மனையின்முன் போலவே அதிகார
நண்ணுவது தகு(ம்);மனையுளோர்
நண்ணூர் எனின்,தக்க பொருள்ஈவ தேதகும்;
நல்மனத் தவள்நோயினால்
வலியுற்ற போதினில் மதிப்பது விடத்தகா ;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௬௪. மனைவியர்க்குத் தகாத இயல்பு]

பானமது செய்தலும், தலைக்கடையில் நிற்றலும்,
பலகணியி னூற்பார்த்தலும்,
பகலில்நித் திரைசெய்த லும்,பொருந் தாதமொழி
பகர்தலு(ம்), மிகுநகைப்பும்,
ஏனையர்க ளொடுமொழித லும்,கிளைஞர் துணையொன்று
மின்றிவெளி யிற்போதலும்,
எழிலான தனமும்- கணைக்கால்க ளுட்-வெளியில்
இலகிடத் துகிலணிதலும்,

ஞானமிகு குரு-கணவன் - மைந்தன்இவர் அல்லாத
நண்ணார்கலத் துண்டலும்,
நலமிலா வேசை-வஞ் சகி-தூர்த்தை யிவர்களொடு
நண்ணலும், மனைவியர்க்கு
மானமும் ஒழுக்கமுங் கெடுவதற்(கு) உறுமென்பர்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௬௫. கற்புடையவள் இயல்பு]

"மகிழ்நனே யினனெனினும் வடிவமில னெனினும்அவன்
வரதெய்வம் என்றெண்ணியே
மகிழ்ந்(து)உப சரித்தல், அவ னுரைவினவல், முனிவர்கள்
வசனிக்கின் இனிமைமொழிதல்,
சுகமுற நுகர்ந்தபின் உண்டுதுஞ் சியபின்னர்ச்
துஞ்சிமுன் எழுதல், மனையைச்
சுத்திசெய் தல்,மாமன் மாமியர்க்(கு) அன்பினொடு
தொழுதுபணி விடைபுரிகுதல்,
மிகவிருந் தினர்வருக இன்புறல், பொலாதகுண
மெல்லியரை நோக்கிநாணல்,
விளம்பும்இவை யுடையபதி விரதையா லுலகம்
விளங்கிடுவ(து) ன்பர் கண்டாய்;
மகபதி தினம்பரவு பாதனே! போதனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்),நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [கூகூ. கணவனும் மனைவியும் ஒத்திருத்தலால் வரும் பேறு]

குணம்உற்ற புருடனும், பதிவிரதை மனைவியுங்
கூடிமகிழ்வுற் றிருக்கின்:
கோ(து)அற்ற நல்லறம், பொருள்இன்ப(ம்) நலம்உறும்;
குலமுழுது(ம்) மகிழ்வை யடையும்;
கனம்உற்ற வான்உலோ கத்தினுங் கற்புடைய
காதலி உகந்திருத்தல்,
காணஅரி தென்றநற் பெரியோர்க ளால்மிகக்
கருதும்ஒரு புகழுமுண்டாம்;
அணிஉற்ற பரலோகம் அதுகிடைக் கும்;குலத்(து)
அரிவையர்க ளதனற்சுகம்
அணுகி,மிக வும்விளங் கிடுவார்கள்" எனமுனிவர்
அறையுமொழி நிலைமையன்றோ?
மணம்உற்ற மலர்வாவி திகழ்மங்கை நகரில்வளர்
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [கூஎ. புருடனை விரோதிக்கின்ற மனைவி யடையும் பாவ இயல்பு]

"பதிவிரதை யர்க்குமணா வாளன்மகி ழச்செயும்
பணிவிடையை யன்றிவேறோர்
பலன்உதவு விரதம்இலை; உண்டென்று செய்பவள்
பதியினுயி ரைக்கவர்ந்து

துதிஅற்ற நரகலோ கஞ்சேர்வள்; அவனுடைய
சொற்படிசெ யாதவள்மிகு
துன்பநோ யினில்உழல்வள்; கோபித்(து)உரைப்பவள்-
துட்டகுண மாவைபவள்-
சதியாக முன்புசிப் பவள்:முடிவ லாகவும்,
தாவும்ஒரு புலியாகவும்,
தாழ்வான பன்றியா கவு(ம்),மறுமை தன்னிலே
சனனமா யலைவர்'' என்பார்;
மதுரங்க னிந்ததே வாரம்அணி தேவனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவணிதை
மருவுபழ மலைநாதனே!

## [சுஅ. இல்லறம் வழுவின பிதாவையன்றிப் புத்திரர் பங்கிடும் இயல்பு]

''தீராத நோயினன், மாறாத முனிவினன்,
திரவியவி ருப்பமில்லான்,
சீலமனை(வி) மைந்தர்தம் மீ(து)ஆசை யுயர்வுளோன்,
செய்யசந் யாசி,பதிதன்,
பேர்ஆன சாத்திர விரோதமா கப்பங்கு
பிரிவுசெய் வோன்,இவ்விதப்
பிதா: விபா கஞ்செயப் பிரியமில னாகினும்,
பெருமைசேர் மைந்தரானோர்
நேரான தாய்பூப் பொழிந்தகா லத்திலுள
நிதிமுதற் பொருளனைத்தும்
நினை(வு)இச்சை யானபொழு திற்பாகம் அதுசெய்தல்
நீதி'' என் பார்முனிவர்காண்;

வாராக வுருவமாய் மால்தேடு பாதனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[சுசு. இல்லறத்தலைவர் அதிகார முறைமை]

"இல்லற வியற்கையினில் உற்றபி தாவொத்
திருக்கின்ற காலந்தனில்
இயல்அனை மைந்தன்எனி னும்பொருளை யாளவு(ம்),
இயன்றதரு மஞ்செய்யவும்,
சொல்வினை செயாதவரைத் தண்டனைகள்செய் யவுந்
தானும்அதி காரன்அல்லன்;
சொன்னதந் தைதிறம் இலாதபொழு தினில்முதற்
சுதன்மனைக்(கு) அதிகாரனும்;
வல்லமை யிலான்எனின், சம்மதியி னால்இளைய
வரில்வலிய னொருவன்அந்த
மனையின்அதி காரஞ் செலுத்துவது தகும்" என்று
வசனிப்பர் முநிவர்கண்டாய்;
மல்லிகை மணங்குலவு வன(ம்)மேவு(ம்) மங்கைநகர்
மகிமன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[எo. பிதா மனதின்படி பங்கிடும் வகை]

"தந்தைமன திச்சையால் மிகவாகி னுங்குறைவு
சமமாகினுஞ் சுதர்க்குச்
சாத்திர விரோதமின் றிப்பாகம் ஈதலும்,
சமம்எனின் மனைவியர்க்கு

மைந்தர்போற் பங்கீத லும்,தன் னுடன்கூடி
மனையின் அடி யாள் அளித்த
மக்களுக் குப்பாகம் ஈதலும், தன்பொருளை
மதலையர்(க்கு) அற்பமாகத்
தந்துமிகு தியையெடுத் துக்கொள்ள வுந்தகும்; அ
தன்றியும், பங்கானபின்
தந்தைஉண(வு) ஆடையில் லாமல்மெலி யின்,புதல்வர்
தருகவே வேண்டும்''என்பார்;
வந்தனைசெ யும்வான வர்க்(கு)அருளும் வள்ளலே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [எக. பிதாவுக்குப் பின்பு மைந்தர் பங்கிடும் வகை]

தனையர்கள் பிதாவினுக் குப்பின்னர் ப்பங்கிடத்
தாயர்சூல் உளரெனின் அது
தனையீன்ற பின்பங்கு செய்தல்வேண் டும்;தாயர்
தனையர்போல் உரிமையல்லார்
எனினும்அவ ருக்குவிர தஞ்செயச் சமபாகம்
ஈதல்வேண் டும்;அவர்களுக்(கு)
இயலான சீதன மிருக்கின், குறைந்தபொருள்
ஈதல்வேண் டும்;சோதர
வனிதையர் தமக்குவி வாகஞ்செ யாதுமுன
வனையத் தருந்தபணியும்,
மகிழ்வினொடு தந்தையால் ஈந்தசீ தனமொடு
மாதாவின் சீதனத்தில்
வனைபணதி யுந்தந்து மணமுடித் திடல்வேண்டு(ம்);
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [எரு. பிரிக்கத் தகாத பொருள்]

"அன்னையொடு தந்தைமூ தாதையிவர் தம்பொருளில்
அன்பாக வஞ்சமின்றி
அளித்தனக்(கு) என்றபொரு ளும்;பொதுப்பொருளுதவி
யன்றியே நேயராலும்,
அன்னிய ரிடத்தினிற் கற்றகல் வியினாலும்,
அவையினிற் றன்கல்வியை
அறிவித்த தாலும்,வழக் கில்உறு சந்தேகம்
அதுதீர்த்த தாலும்,அமரில்
ஒன்னலரை வென்றதா லும்,சௌரி யத்தாலும்,
உறுபாவ நீக்கலாலும்,
உற்றபொரு ளும்பிரிக் கத்தகா(து)" எனநூல்
உணர்ந்தமுனி வோர்மொழிவர்காண்;
வன்னியில் வந்தும்பை யணிகின்ற சடிலனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [எசு. அதிக பங்கு பெறும் இயல்பு]

"அயலோர் கவர்ந்தஅப் பொதுப்பொருளை ஞாதியர்கள்
அனுமதியி லாமல்ஒருவன்,
அன்பாக மீட்பின்,அப் பிரயாசம் அதுகருதி
அரைவாசி கால்வாசியேல்
நயமான அப்பொருளில் அவனுடைய பங்கின்மேல்
நல்கவேண் டும்,ஞாதியோர்
நவிலும்அனு மதிகொண்டு மீட்டவற்கே முழுதும்
நல்கவேண் டும்; சௌரியன்

வியன்ஆன வித்துவான் பொதுவான பொருள்உதவி
மேவிசம் பாதித்ததில்
மேன்மையுடன் அவருக்(கு) இரண்டுபங்(கு) ஈதலே
வேண்டும்'' என் பார்முநிவர்காண்;
வயமா எனுங்கரி உரித்தணியு(ம்) மூர்த்தியே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [எஎ. புத்திரர் பௌத்திரர் முதலினோர் பங்கு ஏற்பாடு]

“தன்மைந்த னொடுதந்தை சமபங் கிடத்தகுந்
தனையர்அநு மதியிலாமல்
தன்பிதா வின்பொரு ளினிற்செலவு செய்யத்
தகாது;மூ தாதைதன்னால்
துன்னுபொரு ளைத்தந்தை யெத்தனையர் அத்தனை
தொகையின்மேற் பங்குசெய்து,
தொடர்பௌத் திரர்தங்கள் தந்தையின் பாகமே
சூழ்தலா (ம்); மூலபுருடன்
பின்(பு)அவன் பொருளில்அவ னுடையபே ரன்தனது
பேரனுக் குப்பாகமும்
பிண்டகரு மமும்அற்று விடும்'' என்று முநிவோர்கள்
பேசுமொழி நிலைமையன்றோ?
வன்மைமிகு முப்புரம் எரித்தசக ரட்சகா!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [எஅ. சீதனச் செய்கை]

"தந்தைதாய் முதலான கிளையோர்கள் வனிதையர்
தமக்குக்கொ டுத்தபொருள்சீ
தனம்என்பர்; அதனையவன் அநுமதியி லாமல்அவள்
தன்புருடன் முதலினோரும்
சொந்தம்என அநுபோகம் அதுசெய்தல் ஒவ்வாது;
துன்பமிக வந்தபோது
சொல்கின்ற அநுமதியி லாமல்அவள் மகிழ்நனை
துய்க்கும்அதி காரன்ஆவான்;
எந்தவிதம் உறினும்அவன் வஞ்சனை கொடுந்தொழில்கள்
ஏலாத கருமஞ்செயின்
எப்போதும் அச்சீத னத்துரிமை அவன்தனக்(கு)
இலை" என்று காத்யாயனன்
மந்திரமி குந்ததே வலன்இவர்கள் மொழிவர்காண்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [எகூ. இதுவும் அது]

"மனமகிழு(ம்) மணவாளன் உறைபொழுதில் அவன்மனைவி
மரணம்உறின், அவள்சீதனம்:
மைந்தர்களும், வதுவையில் லாதமக ளுந்தமது
மணம்ஆன சோதரிபெறுந்
தனையர்க்கு(ம்), மங்கல மடந்தையர்க் குஞ்சிறிது
தனம்ஈந்து, மற்றவெல்லாம்
சமமான பிரிவுசெய்(து) அநுபோகம் அதுசெய்தல்
தரும்;அவட் குசகுதன் இலை

எனின்,மகள் அளித்தமத லையர் அடைவர்; அவர்களும்
இல்லையா கின்,புருடனே
இயலுமனை வியினுடைய சீதனம் பெறுவன்"என
இமயவர்தம் குருமொழிவர்காண்;
வனமருவு வேடன்எச் சிலையுண்ட வள்ளலே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [அ௦. தத்தபுத்திரன் பங்கு ஏற்பாடும், விபத்தனது பொருள் விடயமும்]

தத்தபுத திரனை வன்றன்னை யேற்றவன்
தனதுகோத் திரதெய்வமும்,
தனமும்அடை குவன்,அலால் தற்பெறுபி தாவினது
தனமுதல் எலாம்அகலுவன்;
சித்தமொத் திடுதத்த புத்திரனை வாங்குபின்
செய்வந்(து) உதிக்குமாகின்,
செப்பும்அத் தத்தபுத் திரனுக்(கு) இருக்கின்ற
திரவியந் தனில்நாலிலொன்(று)
ஒத்தபா கந்தருதல் வேண்டு(ம்);மக வின்றிமடி
வுற்றிடு விபத்தன்பொருட்(கு)
உரிமைகற் புடையமனை வியர்அலால் தந்தைதாய்
உறினும்அவ ருக்கில்லைகாண்;
மத்தனைப் புத்திபுற வைத்தருள்செய் நித்தனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[அக. விபத்தன் மனைவி செய்யும் இயல்பு]

"பத்தினி தனக்குமகிழ் நன்சரீ ரத்திலும்,
பாவபுண் ணியபலனிலும்
பாதியுண்(டு)" எனவேத முந்தரும நூல்களும்
பகர்தலால், மகிழ்நன் வீயின்,
புத்திரர்கள் இல்லையெனின், மனைவிஅக் கருமமும்-
புகழ்வாவி முதலானவும்,
புனிததா னங்களும் புரிபொழுது, மாமனார்-
பொருவரிய ஆசாரியன்-
சித்தமகிழ் அம்மான்- விருத்தர்-அதி திகள்இவர்தம்
செம்பதம் வணங்கல்வேண்டும்;
செப்பும்இவை யன்றிவீ ணனகா ரியமதிற்
செலவுசெயல் ஒண்ணுதுகாண்;
மத்தக கசத்தனை யளித்தருள்செய் நித்தனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[அஉ. அவிபத்தனது மனைவிக்குச் செய்யு மியல்பு

"மதலையர்க ளில்லா(து) இறந்தஅவி பத்தனது
மனைவிகற் புடையள்ஆகின்,
மாமனார் முதலினோர் தங்குடும் பத்தினொடு
வைத்(து)இரட் சிக்கொணுமல்
திதியினொடு நித்யநை மித்திகஞ் சீவனஞ்
செயவருட் பொருளையெவரும்
சிந்தைவைத் துக்கவர்தல் ஆகாது; துர்க்குணச்
செய்கையுடை யாள்என்னிலோ,

இதம்உற்ற சீதனப் பொருள்சில வப்பொருள்கள்
எல்லாங் கவர்ந்து,மிகவும்
இழிவான உண(வு),ஆடை வாழ்நாள் கழிப்பதற்(கு)
ஈதலே தகும்;" அதென்று
மதியொத்த மாமுனிவர் உரைசெய்வர் என்பர்காண்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[அரு. விபத்தன் பொருளைக் கொள்ளு முறைமை]

(இதனோடு வருமூன்று கவியும் ஒரு தொடர்பு)

சந்ததியி லாவிபத் தன்வீயின் அவனது
தனம்கற்பு மனைவியர்எலாம்
சமபாக மாக்கொள்க! அவரில்லை யாயின்,அவன்
தருகன்னி அடைவள்; இ,ல்லை,
அந்தம்உறு மணம்ஆன வறுமையுறை மகள்அடைவள்;
அவள்இல்லை, மகளின் மைந்தர்
அடைவர்;இலை, மேற்சொன விபத்தனது தந்தையே
அடைவன்; இலை, அன்னையடைவள்;
அந்தஅன் னையும்இல்லை, சோதரர்கள் அடைவார்கள்;
அவர்இலைப், பின்னோதரர்
அடைவர்;அவர் இல்லைசோ தரர்மைந்தர் அடைவார்கள்;
அவர் இலைப், பின்னோதரர்
மைந்தர் அடைவார்;இல்லை யாகில், இனமுஞ் சொலுவன்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[அச. இதுவும் அது]

தாயினது தாய் அடைவள்; அவள் இல்லை, தந்தையின்
தந்தைஅடை வான்; இல்லை,மு
தாதையின் சுதர் அடைவர்; அவர் இல்லை, அவருடைய
தனையர் அடை வார்; அவரிலை,
ஆயினச பிண்டர் அடை வார்; இலை, சமானோத
கரர் அடைவர்; அவர்கள் இல்லை,
அத்தைமக(வு) அடைவர்; இலை, சிறியதா யின்மைந்தர்
அடைவர்; இலை, அம்மானது
சேய் அடைவர்; அவர் இல்லை, தந்தையின் சுற்றத்தா
சேர்வர்; அவர் இலை, அனையைச்
சேர்ந்தநற் சுற்றத்தர் மேவர்; அவர் இலை, குரு
சேர்வன்; இலை யாகின் மொழிவன்;
மாயன் தனக்காழி அருள்செய்த வள்ளலே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இம்ப மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[அடு. இதுவும் அது]

அவ்விபத் தன்சீடன் அடைவன்; அவன் இலை,ஒருமை
யாகவே தம்படித்தோன்
அடைவன்; இலை, அவ்வூர்சு ரோத்திரிய மான அந்
தணன் அடைவன்; இல்லையாகின்,
ஒவ்விஅத் தேசத்தில் உறைகின்ற சாமான்ய
உயர்சகுண விப்ரன் அடைவன்;
உரைசெய்த இவையந்த ணார்பொரு ளினில்மற்(று)
உகந்தசா தியர்பொருளினை

இவ்விதம் பெறுதற்குக் குருவளவும் இலையாகின்,
எழில்ஆக உலகையாளும்
இறையவர்கள் அடைவர்" என முநியாஞ்ஞவற்கியன்
இயம்புமொழி நிலைமையன்றோ?
மௌவலொடு முல்லையணி கங்கைமண வாளனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[அ௬. பிரிவுக்கு மேற்பிறந்த மைந்தர் விடயம்]

தனையர்தந் தையினுடன் பாகஞ்செ யுங்காலந்
தாய்கருப் பங்கொண்டது
தாம்அறிய வொண்ணு திருந்துபா கஞ்செய்த
தற்பின் பிறந்தசுதனுக்(கு)
அனைவருங் கொண்டபொரு ளிற்பாகம் அதுதருக
அமையும்;அது கொண்டுதந்தை
அப்புதல்வனைக்காக்க வேண்டுமேற் சொன்னபங்(கு)
அளியாது முன்னம்பிதா
தனதுபா கம்வைத்(து) இறக்கினது வேஅந்தத்
தனையனுக் குப்பொருந்தும்;
தாய்பாகந் தீர்ந்தபின் புடையவனை யல்லாது
தன(ம்)ருணம் தன்னின்மற்றோர்
மனம்வைக்கும் அதிகாரம் இல்லை;சூ தகம்உண்டு;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [அஎ. பிரிவுக்குமேற் பிறந்தோர் வந்தோர் பங்கிடும் இயல்பு]

"மதலையர்க் கும்பிதா வுக்கும்உறு பாகம்
வகுப்பான பின்புதந்தை
மருவிகரு வுற்றாப்பி றந்தசுத ருக்(கு)அந்த
மருவுதந் தைப்பொருள் அலால்,
நிதியுற்ற தாயத்தர் பாகங்கொ டுக்கொணார்;
நிலைவிட்டு ஞாதியொருவன்:
நெடுங்காலம் வேறுதே யந்தனி லிருந்தே
நெருங்கிவந்(து) உரிமை கேட்கின்,
பதியுற்ற ஞாதியர்கள் ஒருவர்பெறு தொகையினிற்
பாதிதொகை யானபொருளைப்
பலரும்ஒத் துக்கொடுப் பார்கள்" என் றேகுரு
பகர்ந்தமொழி நிலைமையன்றோ?
மதிஒத்த வதனம்உறு கங்கைமண வாளனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [அஅ. மாடு மேய்ந்த நஷ்ட இயல்பு]

வேலிமிக அடையாத விளைபயிர் தனைக்காலி
மேய்ப்பவன் அறிந்திடாமல்
மேயின்,அது மேய்ப்பவன் றன்மீது குற்றம்இலை;
வேலியுள அதனின்மேய்ந்த
காலியினை மேய்ப்பவன் றனையடித் தலும்,அந்தக்
காலியுடை யவனிடத்தில்
கருதிய பலச்சேதம் அதுவாங்க லுந்தகும்;
களபிணியில் உற்றபசுவும்,

ஞாலமிக துதிசெயும் தேவால யப்பசுவு(ம்),
நண்ணுகன்(று) ஈன்றபத்து
நாளினுக்(கு) உட்பட்ட பசுவுமேய்ந் திடின்,அதால்
நவிலும்ஒரு தண்டமில்லை;
வாலிய விபூதியணி மெய்யனே! துய்யனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[அகூ. சரக்கு இலாபஇயல்பு]

"அஞ்சுதினம் அஞ்சுதிதி அஞ்சுமா தம்இவையில்
யாதொன்றி லேனும்அரசன்
அவ்வணிகர் தங்களுக்(கு) அத்தேச மதனில்உண்
டாஞ்சரக் குக்குநூற் றுக்(கு)
அஞ்சு(ம்),அன் னியதேசம் அதில்வாங்கின் நூற்றினுக்(கு)
ஐயிரண் டும்லாபமுண்
டாகவிலை யேற்பாடு செய்தல்வேண் டும்;இதனை
யன்றி,விலை குறையவாங்கி
மிஞ்சுவிலை யாகவிற் பனைசெயின் தண்டம்
விதிப்பதே வேண்டும்" என்று
மேலான குணமுடைய யாஞ்ஞவற் கியமுநி
விளம்புமொழி நிலைமையன்றோ?
மஞ்(சு)உலவு பொழின்மேவு மங்கைநகர் தன்னில்வளர்
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[கூ௦. இராஜ விரோதிகளைத் தண்டிக்கும் இயல்பு]

"மன்னர்தம் பண்டாரம் அபகரிப் பவரையு(ம்),
மாற்றலர்கள் தமையும்,அவரை
மருவியோ சனையுரைப் பவர்களையும், அவருக்கு
வாய்த்தபொருள் முழுதுங்கவர்ந்(து),
இன்னல்உற அங்கசே தஞ்செய்து கொல்லுவ(து)
இயற்கையாம்; ஈதன்றியே,
எல்லாப் பொருட்கவர்ச் சியில்வாத் தியம்,வீணை,
எழில்ஆயு தங்கள்இவைபோல்
இன்னும்உள அவரவர் சீவனத் துதவியை
இதயம்வைத் துக்கவர்தலும்,
எழில்வேசை யர்க்(கு)அலங் காரமது கவர்தலும்
ஏலா(து)";எனச் சொல்லுவார்;
வன்னியொடு குயில்உலவு சோலைசூழ் மங்கைநகர்
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[கூக. அந்தணரும் வைசியரும் ஆயுதம் எடுக்கும் இயல்பு]

"தங்களைக் காத்தற்பொ ருட்டும், பசுக்கவரு
தருணங்கள் உற்றபொழுதும்,
தையலர்க் கும்-வேதி யர்க்கும்ஒரு துன்பம்அது
சார்கின்ற பொழுதும்,வருணம்
சங்கரம மாகுபொழு தும்,வாணி- தோட்ட(ம்)-நந்
தனவனங் கெடுபொழுதினும்,
தகுதிறம் இலாதவனை நலிசெயும் பொழுது(ம்),அந்
தணரும்வை சியரு(ம்)ஆயுதம்

செங்கையில் எடுக்கலாம்; அன்றி,மற்(று) எப்பொழுதும்
திகழும்அவ் ஆயுதத்தைச்
சேர்தலா கா(து)" என்று வானவர்க் கானநற்
றேசிகன் மொழிந்ததென்பார்;
மங்குதல்இலாதவரம்அருள்கின்ற வள்ளலே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௯௨. இவர்களைக் கொன்றால் குற்றம் இல்லையெனல்]

"கனலையும்- விடத்தையும் இட்டவன்,வேந்தரது
காதுறக் கோள் உரைப்போன்,
கருவியைக் கொண்(டு)உயிர் கொல்லவரு கின்றவன்,
கருதுமந் திர(ம்)-மாரணம்
தனைவிரும் பிச்செய்ப வன்,பொருளையும்-மனைவி
தன்னையுங் கவர்கின்றவன்,
சாபஞ்செ யக்கரம் எடுத்தவன் இவரையும்,
தந்திமுதல் மிருகமும்புள்
இனம்எனினுங் கொலைசெய்ய வரின்அதனை யுங்கொல்ல
லேநன்று குற்றமில்லை;
இன்பமாந் தன்சீவ னைக்காப்ப தேபுண்ய(ம்),
இஃதன்றி வேறிலை"என
வனமருவு சுரர்குரு மொழிந்தமொழி யென்பர்காண்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [கூங. திருடரைத் தண்டிக்கும் இயல்பு]

''சுவர்இடிக் குந்திரு டனைக்கர மிரண்டும்
துணித்துநற் சூலம்ஏற்றல்,
தொடர்பாகி வழியிற் பறிப்போன் கழுத்தில்
சுருக்கிட்டு மேல்தூக்குதல்,
குவிமுலைப் பசுதனைத் திருடினவன் மூக்கைக்
குறைத்துநீ ரினில்அமிழ்த்தல்,
குதிரையைத் திருடினவன் காலையும் இடுப்பையுங்
குறைத்துவதை செய்தல்,மாதைக்
கவரும்ஒரு திருடனை யிரும்பினுற் செய்திடு
கட்டிலைக் கனல்என்னவே
காய்ச்சியத னிற்கிடத் திடல்,ஆடு திருடினவன்
காலைக்கு றைத்தல்'' என்பார்;
மவுனயோ கியர்தேடு பாதனே! போதனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [கூச. இதுவும் அது]

ஆண்பிள்ளை யைத்திருடின் அவனுடைய கைகால்
அறுத்துநாற் சந்திதனிலே
அமைக்கவு(ம்), முடிப்பெடுத் தவனைஅத் தொகைதனை
அறிந்துபணம் ஐம்பதின்கீழ்க்
காண்கின், அத னுக்குப் பதின்ஒரு மடங்(கு) அவன்
கையில்வாங் கவும்,அதன்மேல்
காணின்க ரங்குறைத் திடவு(ம்), நூற் றுக்குமேற்
காணின்வதை யேசெய்கவும்,

வேண்டியொரு பத்தும்இ டாததா னியத்தொகையின்
மேற்றிருடின் வதைசெய்கவும்
வேண்டும்'' என் றேமுனி வியாசனும் மநுவும்
விளம்புமொழி நிலைமையன்றோ?
மாண்புசேர் இரவிமதி யனலான கண்ணனே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [௯௫. கொலை களவு செய்த வேதியனைத் தண்டிக்கும் இயல்பு]

அந்தணன் திருடினல் அப்பொருளும், அப்பொருளின்
அளவுதண் டமும்வாங்குக!
அவ்வளவு சக்தியில் லான்எனின், மாதம்ஒன்(று)
ஆறும்ஒன் றறையாகினும்
பந்தம்ஒரு சிறைதன்னில் அன்னங்கொ டுத்துவைப்
பதுவாகி னும்,சிறந்த
பசுமேய்த்தல்- வாசலைக் காத்தல்இவ் விதம்உறும்
பணியாகி னுங்கொள்ளுதல்,
நிந்தைஉறு கொலைசெயின் அவனுடைய பொருள்எலாம்
நிலையாமல் அபகரித்தல்,
நெற்றியிற் குறியிடுதல், சென்னிமுண் டம்ஆக்கல்
நீதியாம்; வதைஒவாது;
வந்தியுந் துதிசெயின் மைந்தன்அருள் வள்ளலே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[௬௯. வெவ்வாதமாதரது கற்பழித்தவரைத் தண்டிக்கும் இயல்பு]

"மேன்மையுறு கற்புடைய மெல்லியரை வலிவாக
வேவிஅவள் கற்பழித்தோர்:
வேதியர்கள் எனில், ஆயிரம்பணந் தண்டமாம்;
வேந்தர்முதல் மூன்றாவருணப்
பான்மையர் எனின், பொருளை யெல்லாங் கவர்ந்து, வதை
பண்ணலும்- குறியறுத்தும்,
பாலத்தில் யோனிமுத் திரையெழுதி கழுதைமேற்
பார்அறிய வைத்தோட்டலும்,
ஈனகுல வனிதையின் கற்பழித் தவர்தமக்(கு)
இவையினிற் பாதிசெயலும்,
இயல்ஆன தண்டங்கள் ஆகும்; இவை யவரவர்க்கு
ஏற்றபடி செய்யின் அதுவே
வான்கொண்ட புகழ்நிற்கும்" என்றுமுநி வோர்மொழிவர்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[௭௦. ஒப்பிக் கற்பழிந்தவளையும் அழித்தவனையுந் தண்டிக்கும் இயல்பு]

அரிவைதன் மனம்ஒப்ப அவளுடைய கற்பினை
அழித்தவன் உயர்ந்தசாதி
ஆகில்ஐந் நூறுபண மும், சாதி சமமாகில்
ஆயிரம் பணமும், ஈன

வருணம்எனில், வதைசெய்வ துந்தண்ட மாம்;அந்த
மாதர்க்(கு) அதிற் பாதியாம்;
வதைதனக் குப்பாதி செவிமூக்(கு) அறுத்தலே
வழுவிலாத் தண்டமாகும்;
சுருதிகுல மாதுமதம் ஏறி,வலி வாகவே
சூத்திரனை மருவின், அவளைச்
சுணங்கனுக்(கு) இரையா(க)க் கொடுத்தலும், சத்திரியர்
துகள்இலா வைச்யர்இவரை
மருவின்,முண் டனமாக்கி நீக்கலும், இயைந்ததாம்;
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

## [கூஅ. வைதவரைத் தண்டிக்கும் இயல்பு]

"கொடியநடை யினர்களன் றோ,சகல வித்தையிற்
குறைவிலா தவர்களன்றோ,
குருடரன் றோ என்று நற்கணுடை யானையுங்
குருடன்இவ னென்றுமேன்மை
யுடையவரை நிந்தைசெயின், பதின்மூன் றரைப்பணமும்,
உயிர்நடுங் கிடவைதவர்க் (கு)
ஓராயி ரத்துக்கு ளாகநூற் றுக்குமேல்
ஒத்துநிய மித்தபணமும்,
'அடவிலா! மூர்க்க!சீ! போ!' என்று(ம்)இதுபோலு(ம்)
அறையின்ஒரு நூறுபணமும்
ஆம்அதற் கேதண்டம்" என்றுநா ரதமுனி
அறைந்தமொழி நிலைமையன்றோ?
வடுஇலா விடைமீது வருகின்ற தேவனே!
மகிபன்முத் தையமதவேள்

மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[௯௯. அடித்தவரைத் தண்டிக்கும் இயல்பு]

"இழிவான சேறு-சாம் பற்புழுதி- கோழை-மலம்
எச்சிலோ(டு) உதிரம்-கொழுப்(பு)
இவையுடலின் மீ(து)எறியின், நாற்பது பணத்துக்குள்
ஏற்றபடி தண்டமாகும்;
எழுவாதிகொண்(டு)உதிரம் இல்லா தடித்தவர்க்(கு)
இருபதோ டொருபதுபணம்;
இரத்தம்அது காணவும் தோல்அற அடிக்கினும்
எழுபதொடு முப்பதுபணம்;
பழுதாகவிழி-உதடு- செவி-கரம்-கால்அறும்
படிசெய்யின் ஐந்துநூறு
பணமும்;அவை துண்டுற அடிக்கின்,ஓ ராயிரம்
பணமுமே தண்டம்" என்பார்;
வழுவாத வர(ம்)மிக்க அருள்கின்ற சோதியே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அனு தினமு(ம்)நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநாதனே!

[௧௦௦. நஷ்டமும் தண்டமும் வாங்கும் இயல்பு]

"புண்பட அடித்தவன் அப்புண்ணை யாற்றப்
பொருந்துசெல வும்,கொற்றவன்
புகல்கின்ற தண்டமும், சுவரிடித் தவன்அதைப்
புதுமைசெய் செலவும்,அதனால்
எண்ணும்ஒரு தண்டமும் தரல்வேண்டும்; அல்லாமல்
எக்கொடுமை செய்தவரையும்,

இயல்உற்ற வேந்தரா னவர்;கால- தேசம்-இடம்-
எளிமையொடு வலிமை-வருணம்-
நண்ணுசெல் வம்-தரித் திரம்-வயது- தொழில்-குண(ம்)
நடக்கையிவை ஆதிமுழுதும்
நன்குணர்ந்(து) ஏற்றபடி தண்டிக்க வேண்டும்''என
நவிலுவார் முனிவர்கண்டாய்;
மண்உலகும் விண்உலகும் வந்துதொழும் அண்ணலே!
மகிபன்முத் தையமதவேள்
மனதில்அநு தினமு(ம்)நினை தரும்இமய வல்லிநிதை
மருவுபழ மலைநாதனே!

மநுநீதி சதகம்
முற்றுப் பெற்றது.





S. A. M. PRESS, MADRAS.

இலக்கிய, இலக்கண, தருக்க, வேதாந்த,
போதகாசிரியரும், சென்னை ஹிந்து தியலாஜிகல் உயர்தர
கலாசாலைத் தலைமைத் தமிழ்ப்புலவரும், 1911 வருஷ
முதல் 1922 வரையில் 11-வருஷகாலம் "லோகோப
காரி" "சக்கரவர்த்தினி" பத்திரிகைகளின்
ஆசிரியரும் சொந்தக்காரருமான
ஆசிரியர் ஸ்ரீ சாது

## கோ. வடிவேலு செட்டியா ரவர்களால்

உரை இயற்றப்பட்ட, சோதிக்கப்பட்ட சிறந்த நூல்கள்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| திருக்குறள் விரிவான உரையுடன் 2வால்யம் | 8 | 0 |
| திருக்குறள் மூலம்மணக்குடவர் உரைமுற்றும் | 2 | 0 |
| கைவல்ய நவநீதம் மூலம் மூலத்துக்கியைந்தவசன வினாவிடை, விரிவுரைமேற்கோளுட | 2 | 8 |
| வேதாந்த சூடாமணி மூலம் பதவுரையுடன் வினாவிடை வசனம் | 1 | 8 |
| ஸ்ரீபகவத்கீதைமூலத்துக்கியைந்த வசனம், விருத்தியுரையுடன் | 1 | 12 |
| சிவஞானபோத மூலமும் மூலத்துக்கியைந்த வசனமும், விருத்தி உரையும் மேற்கோளுடன் | 0 | 12 |
| நாநா ஜீவவாதக்கட்டளை குறிப்புரையுடன் | 0 | 5 |
| தர்க்கபரிபாஷைவிரிந்த வியாக்யானத்துடன் | 1 | 0 |
| கந்தர்அநுபூதிமூலம்விரிவான உரையுடன் | 0 | 12 |
| ஷெ ரப் காகிதம் | 0 | 8 |
| உபநிடதம்32-விரி உரை சாஸ்திரமேற்கோள்களுடன் (புதியபதிப்பு) | 0 | 10 |
| கந்தர் கலிவெண்பாமூலமும் விரிவுரையும் | 0 | 8 |
| மெய்ஞ்ஞானபோதம் 52 வேதாந்த உபந்நியாச வசனம் | 0 | 12 |
| வியாசபோதினி 1-2பாக | 0 | 12 |
| மகாராராஜர்துறவுவசனம் | 0 | 3 |
| புனிதவதி-காரைக்காலம் | 0 | 2 |
| திருமுருகாற்றுப்படை | 0 | 8 |
| பரமார்த்தபோதவசனம் | 0 | 2 |
| தர்மவாசகம் என்னும் அறவுரை, சச்சிதானந்த சிவம் தானே | 0 | 3 |
| ஒரு பெண்ணரசியின் பிரஹ்மஞானோபதேசம் | 0 | 8 |
| சிவப்பிரகாசப் பெருந்திரட்டு, குறுந்திரட்டு 224 அதிகாரம் 640 பக்கம் 3245 செய்யுள் | 3 | 0 |
| ரிபுகீதைத்திரட்டு; | 1 | 8 |
| சர்வதர்சன சங்கிரகம் | 2 | 8 |
| விவேகசூடாமணி செய்யுள் அரும்பதக் குறிப்பு | 0 | 12 |

# மோக்ஷசாதன இரகசியம்

## ஆசிரியர்:—ஸ்ரீஜத் சுப்பிரமண்யசிவம்

[சென்னை 'தமிழ்நாடு' வாரப்பதிப்பு அபிப்பிராயம் :11-10-1925]

நம் நாட்டிற்குச் சீவாதாரமாயுள்ளவை கிராமங்கள். ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒவ்வொரு துஷ்டதேவதை யுண்டு. அது எந்நாளும் கடும்பசியுடன் கூடியது. அவ்வப்போது இரத்தத்தினாலும் பலியினாலும் திருப்தி செய்யாவிடில் அது கிராமத்தையே எரித்துவிடும். இவ்வித உயிர்க்கொலைகளில் மிகவும் பழமையானது நரபலி. இப்பொழுது அதற்குப் பதிலாக எருமைப்பலியும் ஆட்டுப்பலியும் கோழிப்பலியும் இருந்துவருகின்றன. தெய்வத்தின்பேரில் பழியைச் சுமத்தி ஒன்று மறியாத இச்சீவன்களைக் கொலை செய்வதே கடமையெனக் கொண்டிருக்கிறார்கள். இவ்வித அநாகரிகத்தில் முழுகியிருக்கும் நம் நாட்டைத் தெய்வத்தன்மை வாய்ந்ததென்று உலகம் இன்றைக்கும் புகழுகிறது. புனிதபூமியெனப் பெயர் வாய்ந்தது இத்தேசமே......ஏனெனில், சரித்திர சம்பந்தமாய், நம் நாட்டில் தெய்வங்களை வீசினதுபோல் வேறெந்த நாட்டிலு மில்லையென்று நாம் அறிவோம். இதற்குக் காரண மென்னவெனில், அவதார புருஷர்கள் தோன்றினவிடம் இதுவேயாகும். காமக் குரோத லோப மோகத்திற்குத் தூண்டுகோலாயும் ஆதாரமாயுமுள்ள ஐம்புலன்களை யடக்கியாளும் வழியைக் காண்பித்து நடத்தினவர்கள் நம்மவர்களே. அவர்களே இன்றைக்கும் ரிஷிகளென்ற பல பெயர்களால் அறியப்படுகிறார்கள். அனுபவ சித்தாந்தத்தில் அதன் மகிமையைக் கண்ட நம் முன்னோர்கள் அதை ஒரு கல்வியாக முறைப்படுத்தி, பின்வரும் சந்ததிகளுக்கு உபயோகமாகும்வண்ணம் வழங்கியுள்ளார்கள். அதை, யோகம் யோகாப்பியாசம் என்ற சாதாரணப் பெயரினால் ஜனங்கள் அறிவார்கள். யோகம் என்றால் என்ன ? அதைப் பழகும் விதம் எப்படி ? அப்படிப் பழகுவதினால் ஏற்படும் நன்மை தீமைகளென்ன? அவசியம் அதைப் பழகியே தீரவேண்டுமா என்பதைப் போன்ற விஷயங்கள் இம் மோட்சசாதன இரகசியத்தில் மிகத் தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றன....மனிதனுடைய ஆன்மார்த்த முயற்சிக்குத் தேவையான பல விஷயங்களும் இதில் மிகவும் சுலபமாய்க் கூறப்பட்டிருக்கின்றன. இதில் கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம், ஹடயோகம் முதலானவைகளை உதாரணங்களுடன் விளக்கியிருக்கிறார். இதை எல்லோரும் வாங்கிப் படித்தல் அவசியமாகும். ......விலை ரூபாய் நான்கு.

இனாம்! விரிவான தமிழ் நூல்கள் விலைப்பட்டி இனாம்!

# எமது சொந்தப் பதிப்பு நூல்கள்

| | ரூ. | அ. | | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|
| ஸ்ரீ விவேகானந்தர் ராஜ யோகமும். பதஞ்சலி யோக ஸூத்ரமும் | 2 | 4 | மோக்ஷசாதன ரகசியம் | 4 | 0 |
| கர்மயோகம் நிர்வாணது | 1 | 0 | திருமுருகாற்றுப்படை பரிமேலழகர் உரையும் | 0 | 8 |
| ஞானயோக ரஹஸ்யம | 2 | 4 | கந்தரந்தாதி மூலமும் வில்லிபுத்தூர் ஆழ்வார் உரையும் நூதனமுறை | 0 | 12 |
| வேதாந்த ரஹஸ்யம் | 2 | 0 | கந்தரநுபூதி விரிவுரை | 0 | 8 |
| கிழக்கும் மேற்கும் | 0 | 8 | ஷை கிளேஸ் | 0 | 12 |
| எதிரொலிகள் | 0 | 8 | கந்தர் சஷ்டி கவசம் உரை | 0 | 8 |
| தற்கால இந்தியா | 0 | 10 | ஷை விரிவுரை கிளேஸ் | 0 | 12 |
| வேதாந்த தத்துவம் | 0 | 8 | கந்தர் அலங்காரம் உரை | 0 | 8 |
| கடிதங்கள் 1-2 பாகங்கள் | 1 | 0 | ஷை கிளேஸ் | 0 | 12 |
| எனது குருநாதர் | 0 | 8 | கந்தர் கலிவெண்பா மூலமும் விரிவுரை | 0 | 8 |
| ஞான ரத்னாவளி | 4 | 8 | பிரதோஷமகிமை வசனம் | 0 | 4 |
| 1004 உபதேசமொழிகள் | 2 | 0 | விபூதிஉருத்திராக்கமகிமை | 0 | 6 |
| அருள் மொழிகள் | 1 | 8 | மாதாநீதி 5-ம் பதிப்பு | 1 | 0 |
| அத்வைதசம்பாஷணைகள் | 0 | 8 | ஷை பெதர்வெயிட் | 1 | 8 |
| இராமாயண ரகசியம், பார்த ரகசியம் | 0 | 8 | சோதிட ஆசிரியன் | 1 | 0 |
| சிகாகோ பிரசங்கம் | 0 | 6 | ஒரு பெண்ணரசியின் பிரஹ்ம ஞானோபதேச (வசனம்) | 0 | 8 |
| பந்தமும் மோக்ஷமும் | 0 | 2 | ஆனந்தராமாயணம் 109 சருக்கங்கள், 12,252 | 6 | 0 |
| பதஞ்சலியோக ஸூத்ரம் | 1 | 4 | நீதிநெறி விளக்கம் விருத்தியுரை | 1 | 0 |
| வேதாந்த நிலைமை | 0 | 6 | மநுநீதிசதகம் (புதியமுறை) | | 6 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர்பிரஹ்மாநந்தசம்பாஷணை | 3 | 0 | திரிகடுகம் விருத்தியுரை | 0 | 6 |
| ஸ்ரீ ராமதீர்த்தபரமஹம்ஸ விஜயம் 1-2-ம் | 5 | 0 | ஸீதாராம தத்துவசம்வாதம் | | 4 |
| கணபதி ஸஹஸ்ர நாமாவளி கீர்த்தனு | 0 | 4 | ராமரட்சையின் மகிமை | 0 | 4 |
| அகஸ்தியர் ரணவைத்யம் | 0 | 12 | | | |
| சச்சிதானந்தசிவம் | 1 | 2 | | | |

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புத்தகசாலை,

நெ. 4/34, நயினியப்ப நாயக்கன் வீதி,

பார்க் டவுன் (P. O.), சென்னை.